கசுருஉ. தீக்கணத்தின்பயன்—அந்தரகணம் வேறுதேசத்திற் செலுத்தலும், வாயுகணம் செல்வத்தைப்போக்கலும், சூரியகணம் சூனியஞ்செய்தலும், தீக்கணம் நோய்செய்தலுமாகிய குற்றத்தைத்தருமென்று நூலினையாராய்ந்து தெளிவாகவுணர்ந்தபுலவர்கள் கூறுவார்கள்.

கசுருங. உண்டிப்பொருத்தவகை—ஔகாரநீங்கிய உயிர்க்குற்றெழுத்து நான்கும், கசதபநமவஎன்னும் மெய்யெழுத்து ஏழுமஅமுதெழுத்தாகக்கூறலால் இவ்வெழுத்துகளுளொன்றை முதலாகவுடைய முதற்சீர்க்குக்கூறிய கணத்திற்குரியநட்சத்திரத்தோடு பாடவேண்டுதல் முறையாம், இதுவும் அன்றித்தலைவன்பிறந்த நாளேனும் பெயர் நாளேனுமிரண்டிலொன்று பொருந்தக்கூறிய அடியை முதலெடுத்துச்சொன்னால் அப்பாட்டுடைத்தலைவனுக்குச்செல்வம் எந்நாளும் வளருமென்றுபுலவர் கூறுவர்.

கசுருச. புள்வகை—அகரம்வல்லூறு; இகரம் ஆந்தை; உகரம் காக்கை; எகரம் கோழி; ஒகரம் மயில்.

கசுருரு. கன்னல்வகை—அகரம் தோற்றமாகஇகரம் இன்பத்தையுண்டாக்கும்; உகரம் அரசாகும், எகரம் உறங்கும், ஒகரம் மரணம்.

கசுருசு. அவ்வப்பாட்டுடைத்தலைவன்பெயர்முதலெழுத்தே அவ்வப்பட்சியாகக்கொண்டுஉதிப்பு முதல் அரசீறுகப்பாடின், அப்பாட்டுடைத்தலைவனுக்குச் செல்வமுண்டாகும்.

கசுருஎ. பால்வகை—எழுத்தென்று சொல்லப்படுவன ஆண், பெண், அலி என மூன்றுவகைப்படும்

கசுருஅ. அவற்றுள் ஆண்பாலெழுத்தின்பெயர்— அகரமுதல் ஔகாரமிறுதியாகியஉயிரெழுத்துக்கள் பன்னிரண்டுமாணெழுத்துக்களாம்.

கசுருகூ. பெண்பாலெழுத்தின் பெயர்—உயிர்மெய்யெழுத்துக்களிருநூற்றுப்பதினாறும் பெண்ணெழுத்துக்களாம்.

கசுசும. அலியெழுத்து—மெய்யெழுத்துப் பதினெட்டு மலியெழுத்தாம்

கசுசுக. ஆண்முதலியபகுதிகளின் எழுத்துக்குரியவள் நாமகளாதலாற், பெண்பாலெழுத்தை முதற்சீரின் முதலெழுத்தாகக்கொண்டுகூறல்வேண்டும்.

கசுசுஉ. மங்கலச்சொல்வகை—திரு, களிறு, தேர், பரி, கடல், பொலிவு, மணி, பூ, புகழ், சீர்.

கசுசுங. வேதியர்க்குரியபாவகைப்பெயர்—பிள்ளைக்கவி பாடத்தொடங்கும்வழி அதற்குமுன் வெண்பாகூறுதல் அந்தணர்க்கு உரியது.

௧௲௬௪. அரசர்க்குரிய பாவகைப் பெயர்—நேரிசை யகவலுங் கொச்சகக் கலியு - மாரா யுங்கா லரசர்க் குரித்தே. (௨௬௪)

௧௲௬௫. வணிகர்க் குரிய பாவகைப் பெயர்—வஞ்சியும் மின்னிசை வெள்ளையும் வணிகர்க் - கெஞ்சலில்லா வியல் புடைத்தாகும். (௨௬௫)

௧௲௬௬. சூத்திரர்க் குரிய பாவகைப் பெயர்—நெடுவெண் பாட்டும் நேரிசை யகவலுங் - கடியசூத் திரர்க்குக் கட்டுரைத் தனரே. (௨௬௬)

௧௲௬௭. காப்புக்குரியகடவுள்—காப்புமுத லிசைக்குங் கடவுடானே - பூக்கமழ் தண்டுழாய் புனைந்தவனுமவன் - காவற் கிழமைய னாதலானும் - பூவின்கிழத்தியைப் பொருந்துதலானு - முடியுங்கடகமு மொய்பூந்தாருங் - குழையுநூலுங் குருமணிப்பூணும் - அணியுஞ்செம்ம லாதலானும் - மன்னுறு பிரமனைத் தருத லானும் - முன்னுற மொழிதற் குரிய னெனப் - பன்னி யுரைத்தனர் பாவலர் தாமே. (௨௬௭)

௧௲௬௮. ஆண்பாற்பிள்ளைப்பாட்டின்வகை—பிள்ளைப்பாட்டுத் தெள்ளிதிற் கிளம்பிற் - றிங்களிரண்டிற் றெய்வங் காக்கென-இன்றமிழ்ப்புலவரியம்பிய காப்பு- மைந்தாந்திங்களிற் செங்கீரையாடலு-மாறாந்திங்களிற் கூறுதல்கற்றலோ டேழாந்திங்களி னின்னமுதூட்டலு, மெட்டாந்திங்களினி யற்றலாட்டலு-மொன்பதாந் திங்களி லுயர்சப்பாணியும்- பத்திறனொடொன்றின் முத்தங்கூறலு மாண்டுவரையி னீண்டு வருகென்றலு - மதியீரொன்பதின் மதியையழைத்தலு-மிரண்டாமாண்டிற் சிறுபறை கொட்டலு- மூன்றாமாண்டிற்சிற்றில் சிதைத்தலும்-நாலாமாண்டிற் சிறுதேருருட்டலும்- பத்திற்பூணணிபன்னீராண்டினிற் கச்சொடு சுரிகைகாமுறப்புனைதலென்-றின்னவை பிறவுமாகுமிவற்றுள்- முன்னர்மொழிந்த வொழிந்தவற்றோடும் - பெற்றவாண்பாற் பிள்ளைப்பாட்டாம்— மூன்றுறக்கிளந்த ஆண்டினுள்வனை - இசைத்தபாட விருபாற்குமுரித்தே. ()

௧௲௬௯. பெண்பாற்பிள்ளைப்பாட்டுவகை—பேணும் சிறப்பிற் பெண்மகவாயின் - மூன்றா மாண்டிற்குழமண மொழிதலு - மைந்தின் முதலா வொன்பதின் காறு- மைங்கணைக் கிழவனை யார்வமொடு நோற்றலும்- பனிநீர் தோய்தலும் பாவையாடலு- மம்மனை கழங்கு பந்தடித் தாடலுஞ்- சிறு சோறடுதலுஞ் சிற்றி லிழைத்தலு-மூசலாடலு மென்றிவை யுள்ளிட்டுப்-பேசிய பெண்பாற் பிள்ளைப் பாட்டே. (௨௬௯)

௧௲௭௦. கவியரங்கேற்றிய பாட்டுடைத்தலைவன்செய்யும்வழிபாடு— உருவகமுவமை வழிநிலை மடக்கே-விரிசுடர் விளக்கென விரவி வருநவும்-வேற்றுமை நிலையே வெளிப்படு நிலையே - நோக்கே யுட்கோ டொகைமொழி மிகைமொழி-வார்த்தை தன்மை பிறர்கோள் வைப்பெனப்-பாற்படக் கிடந்த பகுதியின் வருநவுஞ்-சிறப்பு மொழி சிலேடை மறுத்துமொழிநிலையே-வுட

௧௲௬௪. அரசர்க்குரியபாவகைப்பெயர்—அக்கவி முன் நேரிசையாசிரியப்பா ஆயினும் கொச்சகக்கலிப்பாவாயினுங்கூறுதல் அரசர்க்குஉரித்து.

௧௲௬௫. வணிகர்க்குரிய பாவகைப்பெயர்—அக்கவி முன்வஞ்சிப் பாவாயினும் இன்னிசைவெண்பா வாயினும் கூறுதல் வணிகர்க்கு உரித்து.

௧௲௬௬. சூத்திரர்க்குரியபாவகைப்பெயர்—அக்கவிமுன் நெடுவெண்பாட்டாயினும் நேரிசையாசிரியப்பாவாயினும் கூறுதல் சூத்திரர்க்கு உரித்து.

௧௲௬௭. காப்புக்குரியகடவுள்—காப்பாக நான்முகத்துரைக்கப்படும் கடவுள்மலர்களாற்கமழுந் தண்ணியதுழாய்மாலைசூடிய திருமால்; அத்திருமால் காத்தற்குத் திருமகளைப்புணர்தலையுடையவனுதலாலும், கிரீடமுங்கடகமும் நெருங்கிய மலர்மாலையும், குண்டலமும் உபவீதமும் பிறங்கிய கௌத்தாபரணமுமாகிய இவற்றையணியும் இறைவனுதலாலும், நிலைபெற்ற பிரமனைத்தந்தமையாலும் நான்முகத்துக் கூறுதற்குரியவனுமென்று நூல்வல்லோர்கூறுவர்.

௧௲௬௮. ஆண்பாற்பிள்ளைப்பாட்டின்வகை—பிள்ளைக்கவியினிலக்கணத்தைத்தெளிவாகக்கூறில் இரண்டாமாதத்திற் காப்புக்கூறுதலும், ஐந்தாமாதத்தில் செங்கீரைகூறுதலும், ஆறுமாதத்தில் சொல்லுவதைப்பழகுதலோடு ஏழாமாதத்திலமுதூட்டலும், எட்டாமாதத்தில் தாலாட்டுதலும், ஒன்பதாமாதத்திற் சப்பாணிகொட்டலும், பதினோராமாதத்தில் முத்தங்கூறுதலும், பன்னிரண்டாமாதத்தில்வாரானைகூறுதலும், பதினெட்டாமாதத்திற் சந்திரனையழைத்தலும், இரண்டாமாண்டிற் சிறுபறைகொட்டலும், மூன்றுமாண்டில் சிற்றில்சிதைத்தலும், நாலாமாண்டில் சிறுதேருருட்டலும், பத்தாமாண்டில்பூணணிதலும், பன்னிரண்டாம்ஆண்டில் கச்சினோடு உடைவாளைவிரும்பத்தரித்தலுமென்று சொல்லப்பட்டவையும்இவை ஒழிந்தபிறவுமாம்; இவைகளுள் கூறுதல்கற்றலோடு அமுதூட்டலும் பூணணிதலும் கச்சொடு சுரிகைபுனைதலும் என்னும் இவற்றையொழிந்த காப்புமுதல் பத்தும் ஆண்பாற் பிள்ளைக்கவியில்வரும்; இவற்றுள் ஓராண்டுகொறுங்கூறிய நிலங்கள் இருபாலுக்கும் உரியனவாம்.

௧௲௬௯. பெண்பாற் பிள்ளைப்பாட்டுவகை—பெண்பாற் பிள்ளைக்கவியாயின் மூன்றும் ஆண்டில் தான்விளையாடும் பாவைக்கு மணம்பேசுதலும், ஐந்தாம்ஆண்டுமுதல் ஒன்பதாம் ஆண்டுகொறும் மன்மதனையொத்த புருடனைப் பெறத் தவஞ்செய்தலும், குளிர்ந்த நீராடலும், பதுமைவைத்து விளையாடலும், அம்மனையாடலும்,*கழங்காடலும்,பந்தடித்தலும், சிறுசோறடுதலும், சிற்றிலிழைத்தலும், ஊசலாடலும் என்றுசொல்லப்பட்ட இவற்றை யுள்ளிட்டு முற்சூத்திரத்தில் ஆண்டுகொறுங்கூறிய நிலமேழில் ஏற்பனகூறுதல் முறையாம்.

௧௲௭0. கவியரங்கேற்றிய பாட்டுடைத்தலைவன் செய்யும்வழிபாடு—உருவகவணி, உவமையணி, வழிநிலையணி, மடங்குதனவிற்சியணி, தீவகவணி, வேற்றுமையணி, வெளிப்படையணி, கருத்துடையடையணி, குறிப்புநிலையணி, சுருங்கச்சொல்லலணி,மிகுதிநவிற்சியணி,சொற்பின்வருநிலையணி,தன்மையணி, வேற்றுப்பொருள்வைப்பணி, சிறப்பணி, சிலேடையணி, எதிர்ம

*கழங்கு - கழற்காய்.

னிலைக் கூட்ட முவமான முருவக-நுவலா நுவற்சி தலைக்கட் டியமொழி-நிதரி சனம் பாராட் டொருங்கியனிலையே-யையமுயர்வே விரவியல் வாழ்த்தென-வெய்துமிருபத் தெட் டலங்காரத் தாலு-மெழுத்துச் சொற்பொரு ளியாப்பு நெறியாலு-நவையறச் செய்யுள் செய்யும் பாவல-னவையு மரசு மறியப் பாடு வோன்-முத்தமிழ் வல்லோ ஹற்கவி பாடுவோ-னுத்தமச் சாதியிற் றப்பாது யர்ந்தோ-னுறுப்பிற் குறையா தொழுக்கமொடு புணர்ந்தோன்-முப்பதுகழி ந்தங் கெழுபதுக் குளவாம்-பெற்றியினமைந்த பிராயம துடையோன்-பாடுங் கவிதை நாடுறக் கொள்ளிற்-றோரண நாட்டித் துகிற்கொடியெடுத்து-வார்மு ரசியம்ப மறையோர் வாழ்த்த-விழுத்தகு கோலத்து விரித்தபூங் கலிங்கத்துப்-பழிப்பில் பாலிகைப் பல்லுறு முளையின்-விளக்கு நிறை குடத்து விதானப் பந்தரிற்-றுளக்கமில் பல்வகைத் தூணிரைப் பொதியிற்-பல்கிளை நெருக்கிற் பாவையர் பல்லாண்டின்-மல்குவனப் பமைந்த வளமனைநாப்பண்-வெண்டுகி லுடுத்து வெண்பூச் சூடித்-தன்றவிசிருத்தித் தானயலிருந்து-மங்கலச்செய்யுண் மகிழ்ந்து கேட்டுப்-பொன்னு மாடையும் பூணுங் கடகமு-மின்னவை பிறவுங் கொடுத்தே ழடிநிலம்-புரவலன் பின்சென் றொழிகென நிற்றல்-பூவலர் நறுந் தார்ப் புரவலன் கடனே. (உ௲0)

௧௬௭௧. பரிசில்பெறுவகை—பாட்டுடைத்தலைவன் பரிசில்கொடானேல்-மீட்டொரு பேரின் விரைந்ததிற் சேர்த்தி-யூரும் பேரு மொருங்கே பறித்துச்-சீருந் தலையுஞ் செவ்வதினுட்டி- னிங்கிவன்றிருவிழந் திடர்ப்படத் திருவு, மங் கவற்காகுமாகாதிவற்கே. (உ௭௧)

௧௬௭௨. மற்றும் பாவலன் பரிசுபெறுக்காற்செய்யும்வகை—பரிசி லீயாப் பாவிதன் பனுவலைத் - தெரிதர வெழுதிச் செம்பூச் சூடித்- தன்மனைப் புறத் தினுஞ் சாமுண்டி முன்றிலும், பன்னகம் வாழும் பழம்பதி தன்னினு-மயா னத் திடத்தினு மறுகு தன்னினுந் - தியானித்திருந்து செந்தீக் கொளுத்த-வீரறுதிங்களி னிறுதி யாமென்ப- தாதிப்புலவனறைந்த மொழியே. (உ௭௨)

௧௬௭௩. இதுவுமது—பரிசில்பெறுது பாடியபுலவன்-றெருமர லுள்ளமொ டுகலங்கித் தீங்குறிற் - பாட்டுடைத்தலைவன்றிப் பாட்டுக் - கேட்டினிதிருந்த கிளைஞருங்கெடுவர். (உ௭௩)

றுத்தலணி, உடனிலைக்கூட்டவணி, உவமானவுருவகவணி, பிறிதினவிற்சி யணி, ஒப்புமைக்கூட்டவணி, நிதரிசனவணி, புகழ்ச்சியணி, பலபொருட்சொற்றொடர்நிலையணி, ஐயவணி, உயர்வுநவிற்சியணி, கலவையணி, வாழ்த்தணி யென்னும் இருபத்தெட்டலங்காரங்களாலும், எழுத்து, சொல், பொருள், யாப்பு என்னும் நான்குவகையாலும் குற்றமறச் செய்யுள் பாடும்புலவனும், அவைக்களத்திலுள்ளாரும் அரசனும் வியக்கப்பாடுகின்றவனும், இயலிசைநாடகமென்னு முத்தமிழில் வல்லவனும் ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரமென்னும் பாக்களைப்பாடுகின்றவனும், உயர்குடியிற்பிறந்து மேம்பட்டவனும், எல்லாவுறுப்புகளுங் குறைவின்றிநிறைந்து நல்லொழுக்கமுடையானும், முப்பதுவயதிற்கு மேற்பட்டு எழுபதுவயதளவிலுள்ளவனுமாகிய கவிஞனொருவன் தன்மேற்பாடுங்கவிதையையாவருமாராய்ந்தறியத்தாங்கொள்ளுங்கால், அவைக்களத்தில் தோரணத்தைக்கட்டித் துவசத்தைநாட்டி மங்கலமுரசியம்ப அந்தணரொருபால்வாழ்த்த, இவ்வாறு மேன்மைமிக்ககோலத்தோடு விரித்தஅழகிய ஆடையில் பலதானியங்களாலமைந்த புகழ்ச்சிவாய்ந்தமுளைப்பாலிகையோடு தீபமு நல்லபூரணகலசமுநிறைந்த மேற்கட்டியையுடையபந்தலின்கீழ், சலித்தலில்லாத தூண்வரிசையினெருக்கத்தாலும் பலவகைப்பட்ட தமதுறவினர் நெருக்கத்தாலும் பெண்கள்பாடும் பல்லாண்டினாலும் நிறைந்த அழகுஅமைந்த செல்வம்வாய்ந்த தன்கோயில்நடுவில் தான்வெள்ளாடையையுடுத்தி வெள்ளியமலரைச் சூடித்தனதாசனத்தில் தன்மேற்பாடிய புலவனிருக்கச்செய்து தான் பக்கத்திலிருந்து மங்கலமமைந்த செய்யுளை மகிழ்கூர்ந்து கேட்டுப், பொன்னும்ஆபரணமும் கடகமுமிவைபோன்ற பிறவும் அக்கவிஞனுக்கொடுத்து அவன்பின் எழுடிசென்று அவனிற்கவெனக்கூறத்தானிற்றல், மலர்களாற் பரந்த நறுமணங்கமழு மாலையையணிந்த அரசனது கடமையாம்.

கசுஎக. பரிசில்பெறுவகை—தான்பாடியபாட்டிற்குத் தலைவன் தனக்குப் பரிசுகொடானாகில், வேறொருவன் பெயரினைத்தன்னூலிலமைத்து, அவன் ஊரையும்பெயரையும் ஒருசேர அதினின்றும் நீக்கி, சீரினையுந் தளையினையும் பின்பு தன்னாற்பாடப்பட்டவன் பாட்டெக்கியைய நாட்டுவனாயின் முன்புள்ள தலைவன் செல்வமிழந்து துன்பப்பட இலக்குமியும் பின்புள்ளவனைச் சாருவாள், அவனுக்குச் செல்வமுண்டாகாது.

கசுஎஉ. மற்றும் பாவலன் பரிசு பெறுக்காற் செய்யும்வகை—தனக்குப் பரிசுகொடாத பாவிநூலை வேறுபடவெழுதிச் செவந்தபூவினைச்சூடித், தன்மனைக்குப்புறத்திலும் காளிகோவிலிலும் பாம்புவாழும் புற்றிலிடத்திலும் சுடுகாட்டிலும் வீதியிலும்தான் வழிபடுகடவுளைத் தியானஞ்செய்திருந்து அவன் மேற்பாடியநூலை நெருப்பிற்கொளுத்தினால் பன்னிரண்டுமாதத்தில் மரணமடைவானென்பதுமுதற்புலவனாகிய அகத்தியன் கூறியவாய்மைமொழியாம்.

கசுஎஙு. இதுவும்அது—பாடியபுலவன் பரிசுபெறுமையால் மயங்கியமனத்தோடு நிலைகலங்கிச் சுழல்வானாகில், அப்பாடலுக்குத் தலைவனாயுள்ளவன் கெடுதலுமன்றி அப்பாடலை அவைக்களத்திற் கேட்டிருந்த அவனுறவினரும் கெடுவார்.

## ௧-வது இசைவகை.

௧௬௭௪. காமரப்பாட்டின்பெயர்—கானங் கொளையே வரிகந் தருவங் - கீத மிராகங்கேயம் பாணி - நாத மிசைபண் காமரப் பாட்டே. (௨௭௪)

௧௬௭௫. நால்வகைப்பண்ணின்பெயர்—பாலைகுறிஞ்சி மருதஞ் செவ்வழி யென - நால்வகை யாழா நாற்பெரும் பண்ணே. (௨௭௫)

௧௬௭௬. பாலையாழ்த்திறத்தின்பெயர்—அராக நேர்திற முறுப்புக் குறுங் கலி - யாசா ரைந்தும் பாலையாழ்த் திறனே. (௨௭௬)

௧௬௭௭. குறிஞ்சியாழ்த்திறத்தின்பெயர்—நைவளங் காந்தாரம் படுமலை மருளொடு - வயிர்ப்புப் பஞ்சுர மரற்றுச் செந்திற - மிவ்வகை யெட்டுங் குறிஞ்சி யாழ்த் திறனே. (௨௭௭)

௧௬௭௮. மருதயாழ்த்திறத்தின்பெயர்—நவிர்வடுகு வஞ்சிசெய்திற நான்கு - மருதயாழ்க்கு வருந்திற னுகும். (௨௭௮)

௧௬௭௯. செவ்வழியாழ்த்திறத்தின்பெயர்—நேர்திறம் பெயர்திறஞ் சாதாரி முல்லையென- நாலுஞ் செவ்வழி நல்யாழ்த்திறனே. (௨௭௯)

௧௬௮௦. பெரும்பண்ணின்வகை—ஈரிரு பண்ணு மெழுமூன்று திறனு-மாகின்றன விவை யிவற்றுட் பாலையாழ் - செந்துமண் டலியாழ் பவுரி மருதயாழ்- தேவதாளி நிருபதுங்கராகம்-நாகராக மிவற்றுட் குறிஞ்சியாழ் - ஆசாரி சாயவேளர் கொல்லி- கின்னராகஞ் செவ்வழிமௌசாளி சீராகஞ்- சந்தியிவை பதினறும் பெரும்பண். (௨௮௦)

௧௬௮௧. பாலையாழ்த்திறன் வகையின்பெயர்—தக்கராக மந்தாளி பாடை அந்தி மன்றல் நேர்திறம் வராடி - பெரிய வராடி சாயரி பஞ்சமம் - திரடம் அழுங்கு தனுசி சோமராகம்- மேகராகந் துக்கராகங்- கொல்லிவராடி காந்தாரம் சிகண்டி- தேசாக்கிரிசுருதி காந்தாரம்மிவை-யிருபதும்பாலையாழ்த்திறமென்ப.

௧௬௮௨. குறிஞ்சியாழ்த் திறன்வகையின் பெயர்—நட்டபாடை யந்தாளி மலகரி- விபஞ்சிகாந்தாரஞ் செருந்திகௌவுடி-உதயகிரி பஞ்சுரம் பழம்பஞ்சுரம்-மேகராகக்குறிஞ்சிகேதாளி- குறிஞ்சி கௌவாணம் பாடை சூர்துங்கராக- நாகமருள்பழந் தக்கராகம் - திவ்வியவராடி முதிர்ந்தவிந்தள- மநுத்திரபஞ்சமந் தமிழ்க்குச்சரியருட் - புரிநாரா யணிநட்டராக - மிராமக்கிரி வியாழக்குறிஞ்சி பஞ்சமம்தக்கணு திசாவகக்குறிஞ்சி-யாநந்தையெனவிவை முப்பத்திரண்டுங் - குறிஞ்சியாழ்த்திறமாகக்கூறுவர். (௨௮௨)

௧௬௮௩. மருதயாழ்த்திறன்வகையின்பெயர்—தக்கேசி கொல்லி யாரிய குச்சரி-நாகதொனி சாதாளி யிந்தளந் தமிழ்வேளர் கொல்லி-காந்தாரங் கூர்ந்த பஞ்சமம் பாக்கழி-தத்தள பஞ்சம மாதுங்க ராகம்-கௌசிகஞ் சீகாமரஞ் சாரல் சாங்கிமம்-எனவிவை பதினறு மருதயாழ்த்திறனே. (௨௮௩)

கூ - வது இசைவகை.

கரு௭௪. காமரப்பாட்டின்பெயர்—கானம், கொளை வரி, கந்தருவம், கீதம், இராகம், கேயம், பாணி, நாதம், இசை, பண். (கக)

கரு௭ரு. நால்வகைப்பண்ணின்பெயர்—பாலை, குறிஞ்சி, மருதம், செவ்வழி. (௪)

கரு௭௬. பாலையாழ்த்திறத்தின்பெயர்—அராகம், நேர்திறம், உறுப்பு, குறுங்கலி, ஆசான். (ரு)

கரு௭௭. குறிஞ்சியாழ்த்திறத்தின்பெயர்—நைவளம், காந்தாரம், படுமலை, மருள், அயிர்ப்பு, பஞ்சுரம், அரற்று, செந்திறம். (அ)

கரு௭அ. மருதயாழ்த்திறத்தின்பெயர்—நவிர், வடுகு, வஞ்சி, செய்திறம். (௪)

கரு௭௯. செவ்வழியாழ்த்திறத்தின்பெயர்—நேர்திறம், பெயர்திறம், சாதாரி, முல்லை. (௪)

கருஅ௦. பெரும்பண்ணின்வகை—பாலையாழ், செந்து, மண்டலியாழ், பௌரி, மருதயாழ், தேவதாளி, நிருபதுங்கராகம், நாகராகம், குறிஞ்சியாழ், ஆசாரி, சாயவேளர்கொல்லி, கின்னராகம், செவ்வழி, மௌசாளி, சீராகம், சந்தி. (கரு)

கருஅக. பாலையாழ்த்திறன் வகையின்பெயர்—தக்கராகம், அந்தாளி பாடை, அந்தி, மன்றல், நேர்திறம், வராடி, பெரியவராடி, சாயரி, பஞ்சமம், திராடம், அழுங்கு, தனுசி, சோமராகம், மேகராகம், நக்கராகம், கொல்லிவராடி, காந்தாரம், சிகண்டி, தேசாக்கிரி, சுருதிகாந்தாரம். (உ௦)

கருஅஉ. குறிஞ்யாழ்த்திறன் வகையின்பெயர்—நட்டபாடை, அந்தாளி, மலகரி, விபஞ்சி, காந்தாரம், செருந்தி, கௌடி, உதயகிரி, பஞ்சுரம், பழம்பஞ்சுரம், மேகராகக்குறிஞ்சி, கேதாளி, குறிஞ்சி, வௌவாணம், பாடை, சூர்துங்கராகம், நாகம், மருள், பழந்தக்கராகம், திவ்வியவராடி, முதிர்ந்தவிந்தளம், அநுத்திர பஞ்சமம், தமிழ்க்குச்சரி, அருட்புரி, நாராயணி, நட்டராகம், ராமக்கிரி, வியாழக்குறிஞ்சி, பஞ்சமம், தக்கணாதி, சாவகக்குறிஞ்சி, ஆநந்தை. (கூஉ)

கருஅ௩. மருதயாழ்த்திறன்வகையின்பெயர்—தக்கேசி, கொல்லி, ஆரியகுச்சரி, நாகதொனி, சாதாளி, இந்தளம், தமிழ்வேளர்கொல்லி, காந்தாரம், கூர்ந்தபஞ்சமம், பாக்கழி, தத்தளபஞ்சமம், மாதுங்கராகம், கௌசிகம், சீகாமரம், சாரல், சாங்கிமம். (கரு)

கரு அச. செவ்வழி யாழ்த்திறன்வகையின்பெயர்—குறண்டி யாரிய வேளர் கொல்லி-தனுக்காஞ்சி யியந்தை யாழ்பதங் காளி-கொண்டைக்கிரி சீவனி யாமை சாளர்-பாணி நாட்டந் தாணு முல்லை - சாதாரி பைரவம் காஞ்சி யென விவை- பதினறுஞ் செவ்வழி யாழ்த்திற மென்ப. (உஅச)

கருஅரு. மற்றுந்திறத்தின்பெயர்—தாரப் பண்டிறம் பையுள் காஞ்சி- படுமலை யிவைநூற்று மூன்று திறத்தன. (உஅரு)

கருஅசா. நேர்திறத்தின் பெயர்—நுக்கராக நேர்திறமாகும். (உஅசா)

கருஅஎ. காந்தாரபஞ்சமத்தின்பெயர்—உறழ்ப்புக்காந்தாரபஞ்சமமாகும்.

கருஅஅ. சோமராகத்தின் பெயர்—குறுங்கலி யென்பது சோமராகம். ()

கருஅகூ. காந்தாரத்தின்பெயர்—சாரற்றிறமெனி னதுகாந்தாரம். (உஅகூ)

கருகூ0. நட்டபாடையின் பெயர்—நைவளமென்பது நட்ட பாடை. ()

கருகூக. பழம்பஞ்சுரத்தின் பெயர்—பஞ்சுரம் பழம்பஞ்சுரமாகும்மே. ()

கருகூஉ. கவ்வாணத்தின்பெயர்—படுமலையென்பது பகரிற்கவ்வாணம். ()

கருகூரு. அநுத்திரபஞ்சமத்தின்பெயர்—அயிர்ப்பு அநுத்திரபஞ்சமமாகும்.

கருகூச. குறிஞ்சியின்பெயர்—அரற்றுக்குறிஞ்சி. (உகூச)

கருகூரு. செந்துருதியின்பெயர்—செந்திறஞ் செந்துருதி (உகூரு)

கருகூசா. தக்கேசியின்பெயர்—நவிர்தக்கேசி. (உகூசா)

கருகூஎ. வடுகின்பெயர்— இந்தளம் வடுகெனல். (உகூஎ)

கருகூஅ. பாக்கழியின்பெயர் வஞ்சிபாக்கழி. (உகூஅ)

கருகூகூ. சிகண்டியின்பெயர்—செய்திறஞ் சிகண்டி. (உகூகூ)

கச00. சாதாரியின்பெயர்—முல்லை சாதாரி புறநீர்மை நேர்திற - மென வாங்கிசைப்ப ரிசைவல் லுநரே. (ரு00)

கச0க. நால்வகையாழின்பெயர்—பேரி யாழுஞ் சகோட யாழு- மகரயாழுஞ் செங்கோட்டி யாழு - மென நால்வகை யாழி ளுமை மாகும். (ரு0க)

கச0உ. ஏழிசையின்பெயர்—குரலே துத்தங் கைக்கிளை யுழையே - யிளியே விளரி தார மென்றிவை - யேழும் யாழி னிசைகெழு நரம்பே. (ரு0உ)

கச0ரு. அவற்றுள் செம்பாலைவகை—குரல்குரலாகிற் செம்பாலையென்ப.

கச0ச. படுமலைப்பாலைவகை—துத்தங் குரலாகிற் படுமலைப்பாலை. (ரு0ச)

கச0ரு. செவ்வழிப்பாலைவகை—கைக்கிளைகுரலேற் செவ்வழிப்பாலை. ()

கச0சா. அரும்பாலைவகை—உழைகுர லாகி லரும்பாலை யென்ப. (ரு0சா)

கச0எ. கொடிப்பாலைவகை—இளிகுர லாகிற் கொடிப்பாலை யென்ப. ()

கச0அ. விளரிப்பாலை—விளரி குரலாகின் விளரிப் பாலை. (ரு0அ)

கச0கூ. மேற்செம்பாலையின்வகை—தாரங் குரலேன் மேற்செம் பாலை. ()

கசக0. எழ்பாலைகளுள் இதனினிது வலிதெனல்— ஆயவை யேழும்

கருஅச. செவ்வழியாழ்த்திறன் வகையின்பெயர்—குறண்டி, ஆரியவேளர் கொல்லி, தனுக்காஞ்சி, இயந்தை, யாழ்பதங்காளி, கொண்டைக்கிரி, சீவனி, யாமை, சாளர், பாணி, நாட்டம், தானு, முல்லை, சாதாரி, பைரவம், காஞ்சி. (கசு)

கருஅரு. மற்றுந்திறத்தின் பெயர்— தாரப்பண்டிறம், பையுள் காஞ்சி படுமலை, இம்மூன்றும் நூற்றுமூன்று வகைப்படும். (ரு)

கருஅசு. நேர்திறத்தின் பெயர்— துக்காரகம். (க)

கருஅஎ. காந்தாரபஞ்சமத்தின் பெயர்—உறழ்ப்பு. (க)

கருஅஅ. சோமராகத்தின் பெயர்—குறுங்கலி. (க)

கருஅகூ. காந்தாரத்தின்பெயர்—சாரல். (க)

கருகூ0. நட்டபாடையின்பெயர்—நைவளம். (க)

கருகூக. பழம்பஞ்சுரத்தின்பெயர்—பஞ்சுரம். (க)

கருகூஉ. கவ்வாணத்தின்பெயர்— படுமலை. (க)

கருகூரு. அநுத்திரபஞ்சமத்தின்பெயர்—அயிர்ப்பு. (க)

கருகூச. குறிஞ்சியின்பெயர்—அரற்று. (க)

கஉகூரு. செந்துருதியின்பெயர்—செந்திறம். (க)

கருகூசு. தக்கேசியின்பெயர்—நவிர். (க)

கருகூஎ. வடுகின்பெயர்—இந்தளம். (க)

கருகூஅ. பாக்கழியின்பெயர்—வஞ்சி. (க)

கருகூகூ. சிகண்டியின்பெயர்—செய்திறம். (க)

கச00. சாதாரியின்பெயர்—முல்லை.(க). நேர்திறத்தின்பெயர்—புறநீர்மை. (உ)

கச0க. நால்வகையாழின்பெயர்—பேரியாழ், சகோடயாழ், மகரயாழ், செங்கோட்டியாழ். (ச)

கச0உ. ஏழிசையின்பெயர்—குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம். (எ)

கச0ரு. அவற்றுட்செம்பாலைவகை—குரலே குரலாகிற் செம்பாலை. (க)

கச0ச. படுமலைப்பாலைவகை—து த்தமே குரலாகிற்படுமலைப் பாலை. (க)

கச0ரு. செவ்வழிப்பாலைவகை—கைக்கிளையே குரலாகிற் செவ்வழிப் பாலை. (க)

கச0சு. அரும்பாலைவகை—உழையே குரலாயி னரும்பாலை. (க)

கச0எ. கொடிப்பாலைவகை—இளியே குரலாகிற் கொடிப்பாலை. (க)

கச0அ. விளரிப்பாலைவகை—விளரியே குரலாகின் விளரிப்பாலை. (க)

கச0கூ மேற்செம்பாலையின்வகை—தாரமேகுரலாயின்மேற்செம்பாலை(க)

கசக0. ஏழ்பாலைகளுள் இதனினிது வலிதெனல்—அவற்றுள் கூறிய

பாலை யவற்றுட்- செம்பாலைக்குப் படுமலைப்பாலை - படுமலைப் பாலைக்குச் செவ்வழிப்பாலை - செவ்வழிப் பாலைக் கரும்பாலை யாகும் - அரும்பா லைக்குக் கொடிப்பாலை வலிதே - கொடிப்பாலைக்கு விளரிப்பாலை - விளரிப் பாலைக்கு மேற்செம்பாலை - வலிதென் றுரைத்தனர் வான்றமிழ்ப் புலவர். (௲௧௦)

கசகக. ஏழிசைதம்மிற் பிறக்கும் வகை— தாரத்துளுழையு முழையுட்குரலுங் - குரலு ளிளியு மிளியுட் டுத்தமுந்-துத்தத்துள் விளரியும் விளரியுட் கைக்கிளையுந் - தம்மிற் பிறக்குந் தகுதிய வென்ப. (௲௧௧)

கசகஉ. இவற்றின் பிறப்பிடத்தின் பெயர்—குரலது மிடற்றிற் றுத்த நாவினிற் - கைக்கிளை யண்ணத்திற் சிரத்தி லுழையே - இளிநெற் றியினில் விளரி நெஞ்சினில் - தாரநாசியிற் றம்பிறப்பென்ப. (௲௧௨)

கசக௩. இவற்றின் மாத்திரைகளாவன— நான்கு நாலு மூன்று மிரண்டு-நான்கு மூன்று மிரண்டு மாத்திரை - குரன்முதலாகக் கூறுமென்ப. (௲௧௩)

கசகச. ஏழிசையோசையாவன—வேண்டியவண்டு மாண்டகு கிளியுங்-குதிரையும் யானையுங் குயிலுந் தேனுவு - மாடுமென்றிவை யேழிசையோசை.

கசக௫. இவற்றினெழுத்தாவன—ஆஈ ஊஏ ஐஓ ஔவென்- றேழுமேழிசைக் கெய்துமக் கரங்கள். (௲௧௫)

கசக௬. ஏழிசைக்குரிய மணங்களாவன— *மௌவன் முல்லை செவ்வினர்க்கடம்பு - வஞ்சிநெய்தல் வனசம்புன்னை - எஞ்சலில்லா ஏழிசைமணமே.

கசகஎ. இவைகளின்சுவை—பாலுந்தேனுங் கிழானு நெய்யு - மேலமும் வாழையு மாதுளங் கனியு - மாகு மேழிசைக் கமைந்தநன் சுவையே. (௲௧எ)

கசக௮. இவைகளுக் கிறைவர்பெயர்—விசுவா மித்திர னியம னங்கி - திங்கள்வெய்யோன் கௌதமன் காசிப-னென்றிவரோழிசைக் கிறைவரென்ப.

கசக௯. மந்தவிசையின்பெயர்—மந்தரங் காகுளி மந்த விசையே. (௲௧௯)
கச௨௦. சமனிசையின்பெயர்—மதுரந் துத்த மத்திமஞ் சமனிசை. ()
கச௨௧. வல்லிசையின்பெயர்—தாரமு முச்சமும் வல்லிசையாகும். ()
கச௨௨. இசைவிகற்பத்தின்பெயர்—ஏனையோரிசை விகற்பமென்ப. ()
கச௨௩. குரற்குரிய திறத்தின்பெயர்—குரற்குரியதிற மாசான் றிறமே.
கச௨ச. இருதுறையின்வகை— இருதுறை செந்துறை வெண்டுறையென்ப. (௲௨ச)
கச௨௫. பண்ணென்பது—நிறைந்தநரம்பு நிகழும்பண்ணெனல். (௲௨௫)
கச௨௬. திறமென்பது—குறைந்த நரம்பு திறமெனக்கொள்க. (௲௨௬)
கச௨எ. யாழெழு மின்னிசையின்பெயர்—எழாலே யாழெழு மின்னிசையென்ப. (௲௨எ)

*மௌவல் - வனமல்லிகை.

செம்பாலைக்குப் படுமலைப்பாலைவலிது, படுமலைப்பாலைக்குச் செவ்வழிப் பாலைவலிது, செவ்வழிப்பாலைக்கு அரும்பாலைவலிது, அரும்பாலைக்குக் கோடிப்பாலைவலிது, கோடிப்பாலைக்கு விளரிப்பாலைவலிது, விளரிப்பாலைக்கு மேற்செம்பாலைவலிது.

கசகக. எழிசைதம்மிற் பிறக்கும்வகை—தாரத்துள் உழையும், உழையுட் குரலும், குரலுள் இளியும், இளியுள்துத்தமும், துத்தத்துள் விளரியும், விளரியுட் கைக்கிளையும் பிறப்பதுதகுதி.

கசகஉ. இவற்றின் பிறப்பிடத்தின்பெயர்—மிடற்றுல்குரல், நாவின்றுத்தம், அண்ணத்தாற் கைக்கிளை, சிரத்தாலுழை, நெற்றியாலிளி, நெஞ்சால் விளரி. மூக்காற்றாரம்; இவ்வாறு தனித்தனி பிறக்குமென்பர்.

கசகந. இவற்றின்மாத்திரைகளாவன—மாத்திரை கூறுமிடத்து குரல் (ச) துத்தம் (ச) கைக்கிளை (ந) உழை (உ) இளி (ச) விளரி (ந) தாரம் (உ)

கசகச. எழிசை யோசையாவன— வண்டு, கிளி, குதிரை, யானை குயில், தேனு, ஆடு. (எ)

கசகரு. இவற்றினெழுத்தாவன—ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ. (எ)

கசகசு. எழிசைக்குரிய மணங்களாவன—மௌவல், முல்லை, கடம்பு, வஞ்சி, நெய்தல். தாமரை, புன்னை. (எ)

கசகஎ. இவைகளின்சுவை—பால், தேன், கிழான், நெய். ஏலம், வாழை, மாதுளங்கனி. (எ)

கசகஅ. இவைகளுக்கிறைவர்பெயர்—விசுவாமித்திரன், இயமன், அங்கி, சந்திரன், சூரியன், கௌதமன், காசிபன். (எ)

கசகக. மந்தவிசையின்பெயர்—மந்தரம், காகுளி. (உ)

கசஉ0. சமனிசையின்பெயர்—மதுரம், துத்தம் மத்திமம். (ந)

கசஉக. வல்லிசையின்பெயர்—தாரம், உச்சம். (உ)

கசஉஉ. இசைவிகற்பத்தின்பெயர்—எனை. (க)

கசஉந. குரற்குரியதிறத்தின்பெயர்—ஆசான்றிறம். (க)

கசஉச. இருதுறையின்வகை—செந்துறை, வெண்டுறை. (க)

கசஉரு. பண்ணென்பது—நிறைந்த நரம்புள்ளது. (க)

கசஉசு. திறமென்பது—குறைந்தநரம்புள்ளது. (க)

கசஉஎ. யாழெழுமின்னிசையின்பெயர்—எழால். (க)

கசஉஅ. இசைக்குழலின்பெயர்—வாரிவங்கியமற்றிவை யிசைக்குழல்.()

கசஉகூ. வீணையின்பெயர்—வீணை கின்னரந் தண்டு மாகும். (௩உகூ)

கசஙா. யாழின்பெயர்—தந்திவீணை கின்னரங்கோட்டங் - கோடவதிவி வஞ்சி யாழ்ப்பெயர் கூறும். (௩௩௦)

கசஙக. மற்றும்யாழின்பெயர்—அறிகலமுங்கருவியுமப்பெயர்க்குரித்தே.

கசஙஉ. யாழ்வலிக்கட்டின்பெயர்—வலிக்கட்டுத்திவவே. (௩௩உ)

கசஙங. முறுக்காணியின்பெயர்—முறுக்காணி மாடகம். (௩௩௩)

கசஙச. நரம்பின்பெயர்—கோலேதந்திரி குரலிவைநரம்பே. (௩௩ச)

கசஙரு. ஆதியாழாவது—ஆயிரநரம்பிற் றுதியாழாகும். (௩௩ரு)

கசஙசு. உள்ளோசையின்பெயர்—முரல்வு நரல்வுந் தெளிருஞெளிரும்-விழைவு நுணுக்கமு முள்ளோசை யென்ப. (௩௩சு)

கசஙஎ. பல்லியந்தழுவுபாடலின்பெயர்—சங்கீதம்பல்லியந்தழுவுபாடல்.

கசஙஅ. ஆடற்கேற்கும்பாட்டின்பெயர்—செந்துறைப் பாட்டே யாடற் கேற்பது. (௩௩அ)

கசஙகூ. பாடற்கேற்கும்பாட்டின்பெயர்—வெண்டுறைப்பாட்டே பாடற் கேற்பது. (௩௩கூ)

கசச௦. அகமார்க்கமாவது—அருமையிற்பாட லகமார்க்கமாகும். (௩ச௦)

கசசக. யாழ்நரம்போசையின்பெயர்—கலித்தல் சும்மை கம்பலை யழுங்கல் - சிலைத்த றுவைத்தல் சிலம்ப லிரங்க - லிமிழ்தல்விம்ம லிரட்ட லேங்கல் - கனைத்த றழுங்கல் கறங்க லரற்ற - லிசைத்த லென்றிவை யாழ்நரம் போசை.

கசசஉ. ஒலியின்பெயர்—ஓதை நாதங் கம்பலை சும்மை - யாகுலம் புலம்பல் கோடணை யரவ - மோசை கர்ச்சனை யொலியா கும்மே. (௩சஉ)

கசசங. திரட்டோசையின்பெயர்—அலறல்கூப்பிட றெழித்த லுரப்பல்-பிளிற லென்றிவை திரட்டோசை யாகும். (௩ச௩)

## க௦ - வது நாடகவகை.

கசசச. கூத்தின்பெயர்—நடமேநாடகநடன நட்டம்- படித மண்டிலந் தாண்டவம் பரத - நிலைய நிருத்த மாட றாக்கு - வாலுத றுணங்கை யவிநய மிலையம்-பாணி குரவை கூத்தெனப் பகர்வர். (௩சச)

கசசரு. கூத்தின்விகற்பத்தின்பெயர்—கரண முப்பித மலைப்புப்புரியம்-பிரமரிவீரட் டானங் குனிப்பு - வுள்ளானங்கடக மிலைய மென்ப- வொள்ளிய கூத்தின் விகற்பமாகும். (௩சரு)

கசசசு. சிரமஞ்செய்தலின்பெயர்—பருமித்தல் சிரமஞ் செய்தலென்ப.

கசசஎ. சிவனடலின்பெயர்—பாண்டரங்கங் காபாலங்கொடு கொட்டி-ஆண்ட சிவனா தாட லாகும். (௩சஎ)

கசஉஅ. இசைக்குழலின்பெயர்—வாரி, வங்கியம். (உ)

கசஉக. வீணையின்பெயர்—கின்னரம், தண்டு. (உ)

கசங0. யாழின்பெயர்—தந்தி, வீணை, கின்னரம், கோட்டம், கோட வதி, விவஞ்சி. (சு)

கசஙக. மற்றும்யாழின்பெயர்—கலம், கருவி. (உ)

கசஙஉ. யாழ்வலிக்கட்டின்பெயர்—திவவு. (க)

கசஙங. முறுக்காணியின்பெயர்—மாடகம், (க)

கசஙச. நரம்பின்பெயர்—கோல், தந்திரி, குரல். (ங)

கசஙரு. ஆதியாழாவது—ஆயிர நரம்புள்ளது. (க)

கசஙசு. உள்ளோசையின்பெயர்—முரல்வு, நரல்வு, தெளிர், ஞெளிர். விழைவு, நுணுக்கம். (சு)

கசஙஎ. பல்லியந்தழுவு பாடலின்பெயர்—சங்கீதம். (க)

கசஙஅ. ஆடற்கேற்கும் பாட்டின்பெயர்—செந்துறைப்பாட்டு. (க)

கசஙகூ. பாடற்கேற்கும் பாட்டின்பெயர்—வெண்டுறைப்பாட்டு. (க)

கசச0. அகமார்க்கமாவது— அருமையிற்பாடல். (க)

கசசக. யாழ் நரம்போசையின்பெயர்—கலித்தல், சும்மை, கம்பலை, அழுங்கல், சிலைத்தல், துவைத்தல், சிலம்பல், இரங்கல், இமிழ்தல், விம்மல், இரட்டல், ஏங்கல், கனைத்தல், தழங்கல், கறங்கல், அரற்றல், இசைத்தல். (கஎ)

கசசஉ. ஒலியின்பெயர்—ஓதை, நாதம், கம்பலை, சும்மை, ஆகுலம், புலம்பல், கோடணை, அரவம், ஓசை, கர்ச்சனை. (க0)

கசசங. திரட்டோசையின்பெயர்—அலறல், கூப்பிடல், தெழித்தல், உரப்பல், பிளிறல். (ரு)

நாடகவகை.

கசசச. கூத்தின்பெயர்—நடம், நாடகம், நடனம், நட்டம், படிதம், மண்டிலம், தாண்டவம். பரதம், நிலையம், நிருத்தம், ஆடல், தூக்கு, ஆலுதல், துணங்கல், அவிநயம், இலயம், பாணி, குரவை. (கஅ)

கசசரு. கூத்தின் விகற்பத்தின்பெயர்—கரணம், உப்பிதம், மலைப்பு, புரியம், பிரமரி, வீரட்டானம், குனிப்பு, உள்ளானம், கடகம், இலயம். (க0)

கசசசு. கிரமஞ் செய்தலின்பெயர்—பருமித்தல். (க)

கசசஎ. சிவனுடலின்பெயர்—பாண்டரங்கம், காபாலம், கொடுகொட்டி. (ங)

கசசஅ. பதினோருருத்திர ராடலின்பெயர்—கொட்டி குரவை குடங்கு டை வெறியே-மல்லுப்பேடு பாவை கடையம் பாண்டரங்க-மரக்கா லீசர் பதி ேனா ராடல். (௩சஅ)

கசசக. மாயோனுடலின்பெயர்—அல்லியங் குடமாடன் மல்லே மரக் கா-லல்லொளி மாயோ னுடலாகும். (௩சக)

கசரு0. திருமக ளாடலின்பெயர்—பாவை யென்பது திருமக ளாடல்.

கசருக. முருகனுடலின்பெயர்—கொட்டியுங்குடையுங்குமரனுட- லொ டிய துடியு முரித்தா கும்மே. (௩ருக)

கசருஉ. காமனுடலின்பெயர்—பேடாடல் காமன தாட லாகும். (௩ருஉ)

கசரு௩. அயிராணி யாடலின்பெயர்—அயிராணி யாடற்பெயர் கடைய மாகும். (௩ரு௩)

கசருச. துர்க்கையாடலின்பெயர்—துர்க்கை யாடல் மரக்கா லென்ப.()

கசருரு. சத்தமாத ராடலின்பெயர்—எழுவகை நங்கைமா ராடலுந் துடி யே. (௩ருரு)

கசருசு. கைகோத் தாடலின்பெயர்—குரவைக் கூத்தே கைகோத் தா டல். (௩ருசு)

கசருஎ. முடக்கிய விருகை பழுப்புடை யொற்றி யாடலின்பெயர்— முடக்கிய விருகை பழுப்புடை யொற்றித்-தொடக்கிய நடையது துணங்கை யாகும். (௩ருஎ)

கசருஅ. வேலனுடலின்பெயர்—அணங்கும் வெறியும் கழங்கும் வேல னுடல். (௩ருஅ)

கசருக. ஒத்தறுத்தலின்பெயர்—வட்டித்த றட்டல் வட்டணை யொத் தறுத்தல். (௩ருக)

கசசு0. கைகுவித்துக் கொட்டலின்பெயர்—கொம்மை கொட்டல் கை குவித்துக் கொட்டல். (௩சு0)

கசசுக. ஆர்த்துவாய் கொட்டலின்பெயர்—ஆவலங் கொட்ட லார்த்து வாய் கொட்டல். (௩சுக)

கசசுஉ. குந்திநிற்றலின்பெயர்—குந்திய காணிலே குஞ்சித்த லாகும். ()

கசசு௩. கைகூப்பி மெய்கோட்டி நிற்றலின்பெயர்—குடந்தங் கைகூப்பி மெய்கோட்டி நிற்றல். (௩சு௩)

கசசுச. கூத்தாடலின்பெயர்—அகவ ருண்ட லாடுதெ னடித்த- லசைதல் பெயர்த லடுத்தல்கூத் தாடல். (௩சுச)

கசசுரு. மற்றுங் கூத்தாடலின்பெயர்—மாற லென்பதுங் கூற லாகும்.

கசசுசு. தாளவொத்தின்பெயர்—சதியுஞ் சீருந் தாளவொத் தின்பெயர்.

கசசஅ. பதினோருருத்திர ராடலின்பெயர்—கொட்டி, குரவை, குடம், குடை, வெறி, மல், பேடு, பாவை, கடையம், பாண்டரங்கம், மரக்கால். (கக)

கசசகூ. மாயோனுடலின்பெயர்—அல்லியம், குடம், மல், மரக்கால்.(ச)

கசரு0. திருமகளாடலின்பெயர்—பாவை. (க)

கசருக. முருகனுடலின்பெயர்—கொட்டி, குடை, துடி. (கூ)

கசருஉ. காமனுடலின்பெயர்—பேடு. (க)

கசருரு. அயிராணியாடலின்பெயர்—கடையம். (க)

கசருச. துர்க்கையாடலின்பெயர்—மரக்கால். (க)

கசருரு. சத்தமாதராடலின்பெயர்—துடி. (க)

கசருசு. கைகோத்தாடலின்பெயர்—குரவை. (க)

கசருஎ. முடக்கிய விருகை பழுப்புடை யொற்றியாடலின் பெயர்—துணங்கை. (க)

கசருஅ. வேலனுடலின்பெயர்—அணங்கு, வெறி, கழங்கு. (ரு)

கசருகூ. ஒத்தறுத்தலின்பெயர்—வட்டித்தல், தட்டல், வட்டணை. (ரு)

கசசு0. கைகுவித்துக்கொட்டலின்பெயர்—கொம்மை. (க)

கசசுக. ஆர்த்துவாய் கொட்டலின்பெயர்—ஆவலங்கொட்டல். (க)

கசசுஉ. குந்திநிற்றலின்பெயர்—குஞ்சித்தல். (க)

கசசுரு. கைகூப்பி மெய்கோட்டி நிற்றலின்பெயர்—குடந்தம். (க)

கசசுச. கூத்தாடலின்பெயர்—அகவல், தாண்டல், ஆடுதல், நடித்தல், அசைதல், பெயர்தல், அடுத்தல். (எ)

கசசுரு. மற்றுங் கூத்தாடலின்பெயர்—மாறல். (க) ஆ (அ)

கசசுசு. தாளவொத்தின்பெயர்—சதி, சிர். (உ)

கசசுஎ. நாடகமாவது—அதினி னடிக்கு நடம் நாடகமாகும். (௩௬எ)

## கக - வது மண்டிலவகை.

கசசுஅ. விற்றொடுத்தம்பினையெய்வார்க்குரியநால்வகைநிலையின்பெயர்—நவையறு பைசாச நிலையுமண்டிலமு - மாலீட நிலையும் பிரத்தியா லீடமு - மெனக்கொளுநிலையு மொருநால்வகையே. (௩௬அ)

கசசுக. அவற்றுள் பைசாச நிலைவகை— ஒருகா னிலைநின் றொருகான் முடக்கும் - பரிசாய நிலையது பைசாச நிலையே. (௩௬௯)

கசஎ௦. மண்டிலநிலைவகை—இருகான்மண் டிலித்திடுதன்மண்டிலநிலை.

கசஎக. ஆலீடநிலைவகை—வலக்கான் மண்டிலித் திடக்கான் முந்துறி - லதற்பெய ராலீட நிலையதாகும். (௩எக)

கசஎ௨. பிரத்தியாலீடநிலைவகை—வலக்கான் முந்துற் றிடக்கான்மண்டி லித் - திடற்பெயர் பிரத்தியா லீடநிலையே. (௩எ௨)

## க௨ - வது படைவகை.

கசஎ௩. போரின்பெயர்—யுத்த மாகவந் தும்பை சமரங் - கணையஞ் செரு சங்கிரா மம்மிகலெதிர் - ஞாட்புப் பூசலா யோதனமடலம-ரிரண மலைதலா மின்னவை போரே. (௩எ௩)

கசஎச. புறவகை—வெண்பா—வெட்சிநிரைகவர்தன் மீட்டல்கரந்தையாம் - வட்கார்மேற் செல்வது வஞ்சியா—முட்கா - தெதிரூன்றல் காஞ்சியெயில்காத்த னொச்சி - யதுவளைத்த லாகு முழிஞை - யதிரப் - பொருவது தும்பையாம் போர்க்களத்து மிக்கோர் - செருவென் றதுவாகையாம். (௩எச)

கசஎ௫. புறப்புறவகை—வாகை பாடாண் பொதுவியற் றிணையெனப் - போகிய மூன்றும் புறப்புற மாகும். (௩எ௫)

கசஎசு. நால்வகைப்படையின்பெயர்—கோலத்தேர்கரி குதிரை காலா ணால்வகைப் படையி னும மாகும். (௩எசு)

கசஎஎ. தேரின்பெயர்—குயவு வையங் கொடிஞ்சி சயந்தனந் - திகிரியந் திரங்கவரி யரி யிரதந்தேர். (௩எஎ)

கசஎஅ. மற்றுந்தேரின்பெயர்—கூவிரமென்பது மோர்வழிக்கொளலே.

கசஎக. தேருருளின்பெயர்—உருளிகா லாழி பரிதி யுந்தி - திகிரி சில்லி நேமி தேருருளே. (௩எக)

கசஅ௦. தேரினகத்திற்செறிகதிரின்பெயர்—அகத்திற்செறிகதி ராரொனலாகும். (௩அ௦)

கசஅக. தேர்க்கொடிஞ்சியின்பெயர்—கூவிரங்கொடிஞ்சி. (௩அக)

கசஅ௨. தேர்மொட்டின்பெயர்—கூம்புதேர் மொட்டே. (௩அ௨)

கசஅ௩. தேர்முட்டியின்பெயர்—பிரம்புதேர் முட்டி யென்னப் பேசுவர்.

கசஅச. தேர்நடுவின்பெயர்—நடுவெட் டேர்ப்பெயர் நாப்பணுந் தட்டும்.

கசசுஎ. நாடகம்ஆவது—அத்தாளவொத்தின்றிறத்துக்கியையநடிப்பது நடம்.

கக - வது மண்டிலவகை.

கசசுஅ. விற்றொடுத்தம்பினையெய்வார்க்குரியநால்வகைநிலையின்பெயர்—பைசாசம், மண்டிலம், ஆலீடம், பிரத்தியாலீடம். (ச)

கசசுகூ. அவற்றுள் பைசாசநிலைவகை—ஒருகால்நிலைநின் றொருகான் முடக்கல் பைசாசநிலை.

கசஎ0. மண்டிலநிலைவகை—இருகாலும் பக்கல் வளையமண்டி லித்தலே மண்டிலநிலை.

கசஎக. ஆலீடநிலைவகை—வலக்கான் மண்டிலித் திடக்கான் முந்துறலே யாலீடநிலை.

கசஎஉ. பிரத்தியாலீடநிலைவகை—வலக்கான் முந்துற் றிடக்கான் மண்டிலித்தலே பிரத்தியாலீட நிலை.

கஉ - வது படைவகை.

கசஎங. போரின்பெயர்—யுத்தம், ஆகவம், தும்பை, சமரம், கணையம் செரு, சங்கிராமம், இகல், எதிர், ஞாட்பு, பூசல், ஆயோதனம், அடல், அமர் இரணம், மலைதல். (கசு)

கசஎச. புறவகை—வெட்சி=பகைவர்பசுக்கவர்தல், கரந்தை=பகைவர்க வர்ந்த தன்னிரை மீட்டல், வஞ்சி=பகை மேற்செல்லல், காஞ்சி=வரும்பகைவர் முன்னெதி ரூன்றல், நொச்சி=தன்னரண் காத்தல், உழிஞை=பகையரண் வளைத்தல், தும்பை=பொருதல், வாகை=போர் வெல்லல். (அ)

கசஎரு. புறப்புறவகை—வாகை, பாடாண், பொதுவியல். (௩)

கசஎசு. நால்வகைப்படையின்பெயர்—தேர், யானை, குதிரை, காலாள். (ச)

கசஎஎ. தேரின்பெயர்—குயவு, வையம், கொடிஞ்சி, சயந்தனம், திகிரி யந்திரம்- கவரி, அரி, இரதம். (கூ)

கசஎஅ. மற்றுந்தேரின்பெயர்—கூவிரம். ஆகூ (க0)

கசஎகூ. தேருருளின்பெயர்—உருளி, கால், ஆழி, பரிதி, உந்தி, திகிரி, சில்லி, நேமி. (அ)

கசஅ0. தேரி னகத்திற் செறிகதிரின்பெயர்—ஆர். (க)

கசஅக. தேர்க் கொடிஞ்சியின்பெயர்—கூவிரம். (க)

கசஅஉ. தேர்மொட்டின்பெயர்—கூம்பு. (க)

கசஅங. தேர்முட்டியின்பெயர்—பிரம்பு. (க)

கசஅச. தேர்நடுவின்பெயர்—நாப்பண், தட்டு. (உ)

கசஅ௫. தேர்மரச்சுற்றின்பெயர்—கிடுகென் கிளவி தேர்மரச் சுற்றே. ()

கசஅ௬. தேர்ப்பலகைப்பாவின்பெயர்—பாரோ பலகைப் பாவெனலாகும்.

கசஅஎ. தேர்ப்பரப்பின்பெயர்—பாரோ தேரின் பரப்பு மாகும். (௬அஎ)

கசஅஅ. அச்சுருவாணியின்பெயர்—அச்சே தேரி னச்சுரு வாணி(௬அஅ)

கசஅகூ. பரிபூண்டதேரின்பெயர்—பாண்டில்கஞ் சிகைவையம் பரிபூண் டதேரே. (௬அகூ)

கசகூ0. பண்டியின்பெயர்—சகட மொழுகை சாகாடு பண்டி. (௬கூ0)

கசகூக. பண்டியுள்ளிருசின்பெயர்—பண்டியுள்ளிருசு கந்தெனப்பகர்வர்.

கசகூ௨. அரசுவாவினிலக்கணம்—காலோர் நான்குந் தனிக்கையுங் கோசமும் - வாலுறுப் போடேழு மாநிலந் தோய்வதும் - பாலுஞ் சங்கும் போலுங் காலுகிர் - காலினுந் தன்றனிக் கையினு மெய்யினும் - வாலினு மருப்பினுங் கோறல்வல் லதுவா - யேழ்முழ முயர்ந்தொன் பான்முழ நீண்டு - பதின்மூன் றுமுழஞ் சுற்றுடைத் தாகித்-தீயுமிழ் சிறுகண்ணுஞ் செம்புகரு முடைத்தாய் - முன்னுயர்ந்து பின்பணிந்தாய-தியானை யரசுவா வாகுமென்ப. (௬கூ௨)

கசகூ௩. அரசர்க்குரிய பரியினிலக்கணம்—மாதர் தம்மணமென மிக்கமணத்தது- வாழை மடலென வளர்ந்த செவியது - நாலுதாளு மெருத்துமுகனும்- வெந்துமுன்னும் வெண்மையுடையதாய்- எண்பத் திருவிர லுயர முயர்ந்தது- பண்புடை யரசர்க் காவது பரியே. (௬கூ௩)

கசகூச. பரியின்கதிவகைப்பெயர்—மல்ல கதியே வாநர கதியே - மயூர கதியே *வல்லிய கதியே - மால்விடைக் கதியென வருங்கதி யைந்துந் - தோலாப் புரவிக்குச் சொல்லிய கதியே. (௬கூச)

௩௬ - வது காலாள்வகை.

கசகூ௫. பகைவர்மேற்செல்லல்—ஊராண்மையென்பதோங்கிச்செல்லல்.

கசகூ௬. பகைவரிடத்தில்செய்யும் அரியசெயல்—பேராண்மை யென்பதரிய செயலே. (௬கூ௬)

கசகூஎ. புறங்கொடுத்தோர்மேலாயுதம் எறியாமை—சாய்குநர்மேற்படைவிடாமை தழிஞ்சி. (௬கூஎ)

கசகூஅ. வெற்றிப்பூவின்பெயர்—பூளை வெற்றிப் பூவா கும்மே. (௬கூஅ)

கசகூகூ. கொள்ளையின்பெயர்—சூறையுங் கொண்டியுங் கொள்ளை யாகும்.

க௫00. வாரலின்பெயர்—வாரல் கவரல் வௌவ லதுகொளல். (௬00)

க௫0க. படையின்பெயர்—தானை பதாதி தண்டம் பதாகினி-வானி யநிகம் வாகினி தந்திரஞ்-சேனை பதாதி பாடி பலம்படை. (௬0க)

க௫0௨. மற்றும்படையின்பெயர்—நிதானமுங் ககனமுந் தளமு நிகழ்த்தும். (௬0௨)

---

*வல்லியகதி-புலியைப்போலும்பாய்ச்சலுடையநடை.

கசஅ௫. தேர்மரச்சுற்றின்பெயர்—கிடுகு. (க)

கசஅ௬. தேர்ப்பலகைப்பாவின்பெயர்—பார். (க)

கசஅ௭. தேர்ப்பரப்பின்பெயர்—பார். (க)

கசஅஅ. அச்சுருவாணியின்பெயர்—அச்சு. (க)

கசஅ௯. பரிபூண்டதேரின்பெயர்—பாண்டில், கஞ்சிகை, வையம். (௩)

கச௯0. பண்டியின்பெயர்.—சகடம், ஒழுகை, சாகாடு. (௩)

கச௯க. பண்டியுள்ளிருசின்பெயர்—கந்து. (க)

கச௯௨. அரசுவாவினிலக்கணம்—நான்குகாலுந் துதிக்கையுங் கோசமும் வாலும் ஆகியஏழுறுப்புநிலத்திற்றோய்வதும், பாலையுஞ்சங்கையுமொத்த வெண்ணிறம்வாய்ந்த கால்நகமுடையதுமாய், காலினாலுந் தனது துதிக்கையினாலும் சரீரத்தாலும் வாலினாலுங் கொம்பினாலுக் கொல்லவல்லதாய், ஏழுமுழமுயர்ந்து ஒன்பதுமுழநீண்டு பதின்மூன்றுமுழஞ் சுற்றுடைத்தாய், சிறியகண்ணையுஞ் செவந்தபுள்ளிகளையுமுடையதாய், முன்புமுற்கூறிய வாறுயர்ந்துபின்புதாழ்ந்தது அரசியானையென்றுஅறிவுடையோர்சொல்வர்.

கச௯௩. அரசர்க்குரியபரியினிலக்கணம்—பெண்களது மணம் போலமிக்கமணத்ததாய், வாழைமடலைப்போலச்செவியினையுடையதாய் நான்குகாலும்பிடருமுகமுமுதுகும் முன்புறமும் வெண்ணிறமுடையதா யெண்பத்திரண்டு விரலுயர்ந்த குதிரைதத்தமக்குரிய குணங்களையுடையஅரசர்க்குரியது.

கச௯௪. பரியின்கதிவகைப்பெயர்—மல்லகதி, வாநரகதி, மயூரகதி, வல்லியகதி, விடைக்கதி. (௫)

காலாள்வகை.

கச௯௫. பகைவர்மேற்செல்லல்—ஊராண்மை (க)

கச௯௬. பகைவரிடத்திற்செய்யும்அரியசெயல்—பேராண்மை. (க)

கச௯௭. புறங்கொடுத்தார்மேலாயுதம்எறியாமை—தழிஞ்சி. (க)

கச௯அ. வெற்றிப்பூவின்பெயர்—பூளை. (க)

கச௯௯. கொள்ளையின்பெயர்—சூறை, கொண்டி. (௨)

க௫00. வாரலின்பெயர்—கவரல், வௌவல், கொளல். (௩)

க௫0க. படையின்பெயர்—தானை, பதாதி, தண்டம், பதாகினி, வாணி, அநிகம், வாகினி, தந்திரம், சேனை, பகுதி, பாடி, பலம். (க௨)

க௫0௨. மற்றும்படையின்பெயர்—நிதானம், ககனம், தளம். ஆட(க௫)

கருOகூ. படைவகுப்பின்பெயர்—ஒட்டும் யூகமுமுண்டையு மணியு- மற்றிவை படையின் வகுப்பென லாகும். (சOகூ)

கருOச. படையுறுப்பின்பெயர்—தூசியுங்கூழையுநெற்றியுங்கையு-மணியுமென்ப தப்படைக் குறுப்பே. (சOச)

கருOரு. பேரணியின்பெயர்—கூழையென்பது பேரணியாகும். (சOரு)

கருOசு. கொடிப்படையின்பெயர்—தாரே முன்செல் கொடிப்படை யாகும். (சOசு)

கருOஎ. கீழறுத்தலின்பெயர்—அறைபோதல் கீழறுத்தன் படைமறுத்தலாகும். (சOஎ)

கருOஅ. பொரவழைத்தலின்பெயர்—அறைகூவ லென்பது பொரவழைத்தலாகும். (சOஅ)

கச-வது தோற்கருவிவகை.

கருOகூ. முழவின்பெயர்—முழவு குளிரே. (சOகூ)

கருகO. குடமுழாவின்பெயர்—மண்கணை முழவங் குடமுழா வாகும். ()

கருகக. படகத்தின்பெயர்—பணவந் திண்டிம மானகம் படகம். (சகக)

கருகஉ. கடிப்பின்பெயர்—குணிலே கடிப்பின் கூற்றுரும்மே. (சகஉ)

கருககூ. சிறுபறையின்பெயர்—ஆகுளி சிறுபறை. (சககூ)

கருகச. திமிலையின்பெயர்—சல்லரி திமிலை. (சகச)

கருகரு. ஒருகட்பறையின்பெயர்—ஒருகட் பறையே மொந்தை யென்ப.

கருகசு. நிசாளத்தின்பெயர்—தண்ணுமை நிசாளம்- (சகசு)

கருகஎ. ஒருபறைவிகற்பத்தின்பெயர்—ஒருபறை விகற்பந் தாழ்பீலி யாகும். (சகஎ)

கருகஅ. பன்றிப்பறையின்பெயர்—பன்றிப் பறையே குடப்பறையாகும்.

கருககூ. கரடிப்பறையின்பெயர்—கரடி நாமக் கட்டுளை தட்டை. (சககூ)

கருஉO. ஒருகட்பகுவாய்ப்பறையின்பெயர்—பதலையொருகட் பகுவாய்ப் பறையே. (சஉO)

கருஉக. துந்துபியின்பெயர்—சகண்டைமுரசு பணையே சகடந்-துந்துபி யென்ப தூரியமு மாகும். (சஉக)

கருஉஉ. மற்றுந்துந்துபியின்பெயர்—பேரிதகணித மென்னவும்பேசுவர்.

கருஉகூ. உவகைப்பறையின்பெயர்—உவகைப் பறையே தூரிய மாகும்.()

கருஉச. உடுக்கையின்பெயர்—துடியே யுடுக்கை. (சஉச)

கருஉரு. பம்பைப்பறையின்பெயர்—தடாரி பம்பைப் பறை. (சஉரு)

கருஉசு. தம்பட்டத்தின்பெயர்—முரசு தம்பட்ட முழவு மாகும். (சஉசு)

கருஉஎ. தலைவிரிபறையின்பெயர்—குழையுடற் றலைவிரி பறைகத் திரியே. (சஉஎ)

க௫௩. படைவகுப்பின்பெயர்—ஒட்டு, யூகம், உண்டை, அணி. (௪)

க௫௪. படையுறுப்பின்பெயர்—தூசி, கூழை, நெற்றி, கை, அணி. ()

க௫௫. பேரணியின்பெயர்—கூழை. (க)

க௫௬. கொடிப்படையின்பெயர்—தார். (க)

க௫௭ கிழறுத்தலின்பெயர்—அறைபோதல், படைமறுத்தல். (உ)

க௫௮. பொரவழைத்தலின்பெயர்—அறைகூவல். (க)

தோற்கருவிவகை.

க௫௯. முழவின்பெயர்—குளிர். (க)

க௬௰. குடமுழாவின்பெயர்—மண்கணை, முழவம். (உ)

க௬க. படகத்தின்பெயர்—பணவம், திண்டிமம், ஆனகம். (௩)

க௬உ. கடிப்பின்பெயர்—குணில். (க)

க௬௩. சிறுபறையின்பெயர்—ஆகுளி. (க)

க௬௪. திமிலையின்பெயர்—சல்லரி. (க)

க௬௫. ஒருகட்பறையின்பெயர்—மொந்தை. (க)

க௬௬. நிசாளத்தின்பெயர்—தண்ணுமை. (க)

க௬௭. ஒருபறைவிகற்பத்தின்பெயர்—பீலி (க)

க௬௮. பன்றிப்பறையின்பெயர்—குடப்பறை. (க)

க௬௯. கரடிப்பறையின்பெயர்—தட்டை. (க)

க௭௰. ஒருகட்பகுவாய்ப் பறையின்பெயர்—பதலை. (க)

க௭க. துந்துபியின்பெயர்—சகண்டை, முரசு, பணை, சகடம், துந்துபி தூரியம். (௬)

க௭உ. மற்றுந்துந்துபியின்பெயர்—பேரி, தகணிதம். ஆக (அ)

க௭௩. உவகைப்பறையின்பெயர்—தூரியம். (க)

க௭௪. உடுக்கையின்பெயர்—துடி. (க)

க௭௫. பம்பைப்பறையின்பெயர்—தடாரி. (க)

க௭௬. தம்பட்டத்தின்பெயர்—முரசு, முழவு. (உ)

க௭௭. தலைவிரிபறையின்பெயர்—கத்திரி. (க)

கரு௨அ மரக்காற்பறையின்பெயர்—மரக்காற் பறையே கோதை யாகும்.

கரு௨கூ. பலவகைப்பறையின்பெயர்—பணவந் திண்டிமந் தக்கை யிடக்கை - திமிலை கண்டிகை கண்டை குறடு - பணிசிந் தூரம் பாண்டிகம் பீலி - கரடிகை துடிகை கடுவை யூமை-சகடை கிடுகு பல்வகைப் பறையே. (௬௨கூ)

கருகூ௦. வாச்சியப்பொதுப்பெயர்—தூரியமுழவம் வைரங்கோடணை - முரசுபீலி முருடு தடாரி-யியம்பணை வாச்சியப் பொதுப்பெய ரென்ப. (௬கூ௦)

கரு - வது குடைவகை.

கருகூக. குடையின்பெயர்—கவிகை சத்திரம் பிச்சங் கவிப்புக்- குளிராத பத்திரந் தொங்கல் குடைப்பெயர். (௬கூக)

கருகூ௨. செங்குடையின்பெயர்—செங்குடைமீயையுஞ்சிந்தூரமுமாகும்.

கருகூகூ. பீலிக்குடையின்பெயர்—துங்கப் பீலிக் குடைசுழ லாகும். ()

கருகூ௪. பீலிக்குஞ்சக் குடையின்பெயர்—தழையே தொங்கல் சமாலம் பிச்சம் - குளிரி பீலிக் குஞ்ச மாகும். (௬கூ௪)

க௬ - வது ஆயுதவகை.

கருகூரு. வில்லின்பெயர்— கோதண் டஞ்சிலை கொடுமரங் கார்முகஞ் - சாபந் துரோணந் தனுவில் லாகும. (௬கூரு)

கருகூ௬. மற்றும்வில்லின்பெயர்—தடிமுனி சிந்து வாரஞ் சராசனந் - தவரோ வேணுச் சார்ங்கமுமாகும். (௬கூ௬)

கருகூஎ. நாணின்பெயர்—பூரி யாவம்பூட்டுத் தொடை வடம்-நாரி நரம்பு குணநாணின் பெயரே. (௬கூஎ)

கருகூஅ. நாணிஞெலியின்பெயர்—நாணி ஞெலியே *மருமராஞ்சமாகும்.

கருகூகூ. அம்பின்பெயர்—பகழி வாளி தோணி பாணங் - கதிரம் பல்லங் கணைகோல் சரமொடு - வண்டு பத்திரஞ் சிலீமுகம் விசிக - மம்பின் பெயருடு வாகலு முரித்தே. (௬கூகூ)

கரு௪௦. அம்புத்தலையின்பெயர்—உடுவம் புத்தலை. (௬௪௦)

கரு௪க. மொட்டம்பின்பெயர்—உதண்மொட்டம்பே (௬௪க)

கரு௪௨. அம்புக்குப்பியின்பெயர்—புழுகு குப்பி. (௬௪௨)

கரு௪கூ. அம்புக்கட்டின்பெயர்—புதை யம்புக் கட்டே. (௬௪கூ)

கரு௪௪. அம்புக்குதையின்பெயர்—பகழி புங்க மம்புக் குதையே. (௬௪௪)

கரு௪ரு. அம்புத்திரள்கட்டுங்கயிற்றின்பெயர்—பகழித்திரளின் பெயர்பற்றுக்கை. (௬௪ரு)

கரு௪௬. அம்பறாத்தூணியின்பெயர்—தூணி புட்டி லம்பறாத் தூணி. ()

கரு௪எ. மற்றுமம்பறாத்தூணியின்பெயர்—ஆவமு மாவ நாழிகையுமாகும்.

கரு௪அ. குதையின்பெயர்—குலையே வில்லி விருதலைக் குதையே.(௬௪அ)

---

*மாஞ்சம்என்பதுமற்றொருபிரதி.

கருஉஅ. மரக்காற்பறையின்பெயர்—கோதை. (க)

கருஉகூ. பலவகைப்பறையின்பெயர்—பணவம், திண்டிமம், தக்கை, இடக்கை, திமிலே, கண்டிகை, கண்டை, குறடு, பணே, சிந்தூரம், பாண்டிகம், பீலி, கரடிகை, துடிகை, கடுவை, ஊமை, சகடை, கிடுகு. (கஅ)

கருங0. வாச்சியப்பொதுப்பெயர்—தூரியம், முழவம், வைரம், கோடணே முரசு, பீலி, முருடு, தடாரி, இயம், பணே. (க0)

குடைவகை.

கருஙக. குடையின்பெயர்—கவிகை, சத்திரம், பிச்சம், கவிப்பு, ஆதபத்திரம், தொங்கல். (சு)

கருஙஉ. செங்குடையின்பெயர்—மீயை, சிந்தூரம். (உ)

கருஙங. பீலிக் குடையின்பெயர்—சுழல். (க)

கருஙச. பீலிக குஞ்சக் குடையின்பெயர்—தழை, தொங்கல், சமாலம், பிச்சம், குளிரி. (ரு)

ஆயுதவகை.

கருஙரு. வில்லின்பெயர்.—கோதண்டம், சிலே, கொடுமரம், கார்முகம், சாபம், துரோணம், தனு. (எ)

கருஙசு. மற்றும்வில்லின்பெயர்—தடி, முனி, சிந்துவாரம், சராசனம், தவர், வேணு, சார்ங்கம். ஆட (கச)

கருஙஎ. நாணின்பெயர்—பூரி, ஆவம், பூட்டு, தொடை, வடம், நரரி, நரம்பு, குணம். (அ)

கருஙஅ. நாணிெெலியின்பெயர்—மருமராஞ்சம். (க)

கருஙகூ. அம்பின்பெயர்—பகழி, வாளி, தோணி, பாணம், சுதிரம், பல்லம், கணே, கோல், சரம், வண்டு, பத்திரம், சிலீமுகம், விசிகம், உடு. (கச)

கருச0. அம்புத்தலேயின்பெயர்—உடு. (க)

கருசக. மொட்டம்பின்பெயர்—உதண். (க)

கருசஉ. அம்புக்குப்பியின்பெயர்—புழுகு. (க)

கருசங. அம்புக்கட்டின்பெயர்—புதை. (க)

கருசச. அம்புக்குதையின்பெயர்—பகழி, புங்கம். (உ)

கருசரு. அம்புத்திரள்கட்டுங்கயிற்றின்பெயர்—பற்றுக்கை. (க)

கருசசு. அம்பறுத்தூணியின்பெயர்—தூணி, புட்டில். (உ)

கருசஎ. மற்றுமம்பறுத்தூணியின்பெயர்—ஆவம், ஆவநாழிகை. (உ)

கருசஅ. குதையின்பெயர்—குலே. (க)

கடுசக. அம்பினிறகின்பெயர்—அம்பி னிறகு வுடுவென் றாகும். (சசக)

கடுடு௦ பிண்டிபாலத்தின்பெயர்—பீலித்தண் டெஃகம் பிண்டி பாலம். ()

கடுடுக. நாராசத்தின்பெயர்—சலாகை நாராசம். (சடுக)

கடுடுஉ. இருப்புமுள்ளின்பெயர்—தாறிருப்பு முள்ளே. (சடுஉ)

கடுடுௗ கழுமுள்ளின்பெயர்—கழுக்கடை கழுமுட் கட்டுளை யாகும். ()

கடுடுச. வாளின்பெயர்—நவிரோதி நாட்டங் கடுத்தலை நாந்தகம்-வசியே கட்கம் வஞ்சம் வாளே. (சடுச)

கடுடுடு. மற்றும்வாளின்பெயர்—மட்டா யுதந்தூ வத்திய மாகும். (சடுடு)

கடுடுசு. கூன்வாளின்பெயர்—கோணங் கூன்வாள். (சடுசு)

கடுடுஎ. சிறுவாளின்பெயர்—முசுண்டி சிறு வாள். (சடுஎ)

கடுடுஅ. கொடுவாளின்பெயர்—குயமும் புள்ளமுங் கொடுவா ளாகும். ()

கடுடுகூ. அரிவாளின்பெயர்—அரிகதிர்க் கத்திக்கு மப்பெய ராகும். ()

கடுசு௦. *சுழல்படையின்பெயர்—சுழல்படை வட்டம் பாரா வளையம், ()

கடுசுக. ஈர்வாளின்பெயர்—வேதினங் கரபத் திரமுமீர்வாள், (சசுக)

கடுசுஉ, உடைவாளின்பெயர்—சுரிகை பத்திரங் குறும்பிடி யுடைவாள்.

கடுசுௗ. கைவாளின்பெயர்—கண்ட மென்பது கைவா ளாகும். (சசுௗ)

கடுசுச. கணையத்தின்பெயர்—எழுவும் பரிகமுங் கணைய மென்ப. (சசுச)

கடுசுடு. சூலத்தின்பெயர்—காள நல்வசி சூலங் கழுமுண் - மூவிலை வேலே முத்தலைக் கழுவெனல். (சசுடு)

கடுசுசு. பூங்கருவியின்பெயர்—சன்னகம் பூங்கருவியாகச்சாற்றும். ()

கடுசுஎ. மழுவின்பெயர்—பரசு கணிச்சி நவியமு மழுவே. (சசுஎ)

கடுசுஅ. மற்றுமழுவின்பெயர்—பாலந் தண்ணமு மழுப்படை யாகும். ()

கடுசுகூ. இலைமூக்கரிகத்தியின்பெயர்—குளிரிலை மூக்கரி கத்தி யாகும் - கணிச்சியு மதன்பாற் கருதப்படுமே. (ச௭௦)

கடு௭௦, கோடாலியின்பெயர்—குடாரமு நவியமுங் கோடாலி யாகும்.

கடு௭க, தோட்டியின்பெயர்—சரணங் கணிச்சி யங்குசந் தோட்டி. ()

கடு௭உ, மற்றுந்தோட்டியின்பெயர்—கோண மென்றுங் கூறப்படுமே. ()

கடு௭ௗ. வேலின்பெயர்—உடம்பிடியெஃக மயிலே சத்தி-விட்டேறரண ஞாங்கரும் வேலே. (ச௭ௗ)

கடு௭ச. வச்சிராயுதத்தின்பெயர்—வயிரப் படையே சம்பங் குலிசம் - அசனி வச்சிரப் படையாகும்மே. (ச௭ச)

கடு௭டு. மற்றும் வச்சிராயுதத்தின்பெயர்—சதகோடி யென்பதுஞ் சாற் றப்பெறுமே. (ச௭டு)

*சுழல்படைவளைதடி.

கருசகூ. அம்பினிறகின்பெயர்—உடு. (க)

கருரு௦. பிண்டிபாலத்தின்பெயர்—பீலித்தண்டு, எஃகம். (உ)

கருருக. நாராசத்தின்பெயர்—சலாகை. (க)

கருருஉ. இருப்புமுள்ளின்பெயர்—தாறு. (க)

கருருங. கழுமுள்ளின்பெயர்—கழுக்கடை. (க)

கருருச. வாளின்பெயர்—நவிர், ஏதி, நாட்டம், கடுத்தலை, நாந்தகம், வசி, கட்கம், வஞ்சம். (அ)

கருருரு. மற்றும் வாளின் பெயர்—மட்டாயுதம், தூவத்தி. ஆ (க௦)

கருருசு. கூன்வாளின்பெயர்—கோணம். (க)

கருருஎ. சிறுவாளின்பெயர்—முசுண்டி. (க)

கருருஅ. கொடுவாளின்பெயர்—குயம், புள்ளம். (உ)

கருருகூ. அரிவாளின்பெயர்—மேற்கூறியபெயர்கள், அரிவாட்குமாகும். ()

கருசு௦. சுழல்படையின்பெயர்—வட்டம், பாராவளையம். (உ)

கருசுக. ஈர்வாளின்பெயர்—வேதினம், கரபத்திரம். (உ)

கருசுஉ. உடைவாளின்பெயர்—சுரிகை, பத்திரம், குறும்பிடி. (ங)

கருசுங. கைவாளின்பெயர்—கண்டம் (க)

கருசுச. கணையத்தின்பெயர்—எழு, பரிகம். (உ)

கருசுரு. சூலத்தின்பெயர்—காளம், நல்வசி, சூலம், கழுமுள், மூவிலைவேல், முத்தலைவேல், கழுவு. (எ)

கருசுசு. பூங்கருவியின்பெயர்—சன்னகம். (க)

கருசுஎ. மழுவின்பெயர்—பரசு, கணிச்சி, நவியம். (ங)

கருசுஅ. மற்றுமழுவின்பெயர்—பாலம், தண்ணம் ஆ (ரு)

கருசுகூ. இலைமூக்கரி கத்தியின்பெயர்—குளிர், கணிச்சி. (உ)

கருஎ௦. கோடாலியின்பெயர்—குடாரம், நவியம். (உ)

கருஎக. தோட்டியின்பெயர்—சரணம், கணிச்சி, அங்குசம். (ங)

கருஎஉ. மற்றுந்தோட்டியின்பெயர்—கோணம். ஆ (ச)

கருஎங. வேலின்பெயர்—உடம்பிடி, எஃகம், அயில், சத்தி, விட்டேறு, அரணம், ஞாங்கர். (எ)

கருஎச. வச்சிராயுதத்தின்பெயர்—வயிரப்படை, சம்பம், குலிசம், அசனி. (ச)

கருஎரு. மற்றும்வச்சிராயுதத்தின்பெயர்—சதகோடி. ஆ (ரு)

கடுஎசு. தண்டாயுதத்தின்பெயர்—தடியுங் கதையும் சீருந் தண்டெனல்.

கடுஎஎ. மற்றுந்தண்டாயுதத்தின்பெயர்—வயிரமு முளையு மெறுழுமற்றுதுவே. (சஎஎ)

கடுஎஅ. கிளிகடிகருவியின்பெயர்—தழலுந் தட்டையுங் கிளிகடி கருவி.

கடுஎகூ. குறுந்தடியின்பெயர்—குணிலே குறுந்தடி (சஎகூ)

கடுஅ0. ஈட்டியின்பெயர்—இட்டி யீட்டி. (சஅ0)

கடுஅக. கவணின்பெயர்—கவணை யொடிசில் குணில் குளிர் கவணே. ()

கடுஅஉ. சிறுசவளத்தின்பெயர்—குந்தஞ் சிறுசவளம். (சஅஉ)

கடுஅங. பெருஞ்சவளத்தின்பெயர்—குந்தந்தோமரம பீலிபெருஞ்சவளம்.

கடுஅச. சக்கரத்தின்பெயர்—திகிரி நேமி யாழியெஃகம்வளை - பரிதியொளி வட்டஞ் சுதரிசனஞ் சக்கரம். (சஅச)

கடுஅரு. கைக்கட்டியின்பெயர்— கோதை கைக்கட்டி கைப்புடையுங் கூறும். (சஅரு)

கடுஅசு. கைவிடுபடையின்பெயர்—அத்திரம் விடுபடை. (சஅசு)

கடுஅஎ. கைவிடாப்படையின்பெயர்—சத்திரம் விடாப்படை. (சஅஎ)

கடுஅஅ. சுவரகழ்கருவியின்பெயர்—கன்னஞ் சுவரகழ் கருவியாகும். ()

கடுஅகூ. தறிகைக்கும்உளிக்கும்பெயர்—தறிகைகணிச்சியுளிக்குமதுவே.

கடுகூ0. கைவேலின்பெயர்—கைவேல் விகற்பங் கப்பணந் தோமரம். ()

கடுகூக. கயிற்றின்பெயர்—பாசங் கச்சை நாண்வடம் பழுதை - தாமமிரச்சுத் தாம்பு கயிறே. (சகூக)

கடுகூஉ. தாமணியின்பெயர்—தாமணி கண்ணி தாம்பு மாகும். (சகூஉ)

கடுகூங. வலைக்கயிற்றின்பெயர்—சால மென்பது கயிற்றுவலையே.(சகூங)

கடுகூச. அஞ்சனமெழுதுங்கருவியின்பெயர்— கோலே யஞ்சன மெழுதுங் கருவி. (சகூச)

கடுகூரு. எழுதுங்கருவியின்பெயர்—கண்டமூசியாணி யெழுதுங்கருவி.

கடுகூசு. ஊசியின்பெயர்—சூசி யூசி யென்ப. (சகூசு)

கடுகூஎ. ஊசித்தொளையின்பெயர்—பாசமூ சித்தொளை துன்னமும் பகரும். (சகூஎ)

கடுகூஅ. நுனியின்பெயர்—நுதியு நுனையு நுனியா கும்மே. (சகூஅ)

கடுகூகூ. முசுண்டியின்பெயர்—தானை படையே முற்கர *முசுண்டி. ()

கசு00. இருப்புலக்கையின்பெயர்—முசலமிருப் புலக்கை. (ரு00)

கசு0க. சங்கிலியின்பெயர்—துவக்குத் தொடர்சங் கிலியே யிடங்கணி.

கசு0உ. பற்றிரும்பின்பெயர்—கற்பொறியள்வலி பற்றிரும்பாகும்.(ரு0உ)

---

* முசுண்டி-சம்மட்டி வடிவினதோராயுதம்.

௧௫௭௬. தண்டாயுதத்தின்பெயர்—தடி, கதை, சீர். (௩)

௧௫௭௭. மற்றுந்தண்டாயுதத்தின்பெயர்—வயிரம், மூலை, எறுழ். ஆக (௬)

௧௫௭௮. கிளிகடிகருவியின்பெயர்—தழல், தட்டை (௨)

௧௫௭௯. குறுந்தடியின்பெயர்—குணில். (௧)

௧௫௮௦. ஈட்டியின்பெயர்—இட்டி. (௧)

௧௫௮௧. கவணின்பெயர்—கவணை, ஒடிசில், குணில், குளிர். (௪)

௧௫௮௨. சிறுசவளத்தின்பெயர்—குந்தம். (௧)

௧௫௮௩. பெருஞ்சவளத்தின்பெயர்—குந்தம், தோமரம், பீலி. (௩)

௧௫௮௪. சக்கரத்தின்பெயர்—திகிரி, நேமி, ஆழி, எஃகம், வளை, பரிதி ஒளிவட்டம், சுதரிசனம். (௮)

௧௫௮௫. கைக்கட்டியின்பெயர்—கோதை. கைப்புடை. (௨)

௧௫௮௬. கைவிடுபடையின்பெயர்—அத்திரம். (௧)

௧௫௮௭. கைவிடாப்படையின்பெயர்—சத்திரம். (௧)

௧௫௮௮. சுவரகழ்கருவியின்பெயர்—கன்னம். (௧)

௧௫௮௯. தறிகைக்கும் உளிக்கும்பெயர்—கணிச்சி. (௧)

௧௫௯௦. கைவேலின்பெயர்—கப்பணம், தோமரம். (௨)

௧௫௯௧. கயிற்றின்பெயர்—பாசம், கச்சை, நாண், வடம், பழுதை, தாமம், இரச்சு, தாம்பு. (௮)

௧௫௯௨. தாமணியின்பெயர்—கண்ணி, தாம்பு. (௨)

௧௫௯௩. வலைக்கயிற்றின்பெயர்—சாலம். (௧)

௧௫௯௪. அஞ்சனமெழுதுங்கருவியின்பெயர்—கோல். (௧)

௧௫௯௫. எழுதுங்கருவியின்பெயர் – கண்டம், ஊசி, ஆணி. (௩)

௧௫௯௬. ஊசியின்பெயர்—சூசி. (௧)

௧௫௯௭. ஊசித்தொளையின்பெயர்—பாசம், துன்னம். (௨)

௧௫௯௮. நுனியின்பெயர்—நுதி, நுனை. (௨)

௧௫௯௯. முசுண்டியின்பெயர்—தானை, படை, முற்கரம். (௩)

௧௬௦௦. இருப்புலக்கையின்பெயர்—முசலம். (௧)

௧௬௦௧. சங்கிலியின்பெயர்—துவக்கு, தொடர், இடங்கணி. (௩)

௧௬௦௨. பற்றிரும்பின்பெயர்—கற்பொறி, அள், வலி. (௩)

கக௱0௩. கூர்மையின்பெயர்—வயிரமும் வள்ளும் வசியும் வையு - மயிலு நிசிதமு மள்ளும் பூவு-மாருங் கூர்மையி னபிதா னம்மே. (௫0௩)

கக௱0௪. ஆயுதப்பொதுப்பெயர்—தானை படையே படைக்கலங் கருவி - யெஃகிவை யாயுதம் வேலு மியம்புவர். (௫0௪)

கக௱0௫. மற்றும் ஆயுதப்பொதுப்பெயர்—துப்பு மேதியுஞ் சுதன்மமு மாகும். (௫0௫)

கக௱0௬. படையுறையின்பெயர்—தடறுங்கருவிப்புட்டிலுமுறையெனல்.

கள - வது செயற்கைவகை.

கக௱0௭. கவசத்தின்பெயர்—ஆசு தசனம் சடாரி யரணம் - பாசங் கண்டம் பருமங் கச்சை - சாலிகை மாடிகை கந்தளம் பார - மேழகங் கசையே மெய்புகு கருவி - கவசப் பெயரோ சுடாரியுஞ் சொல்லும். (௫0௭)

கக௱0௮. மற்றும் கவசத்தின்பெயர்—அந்தளமு மபரமுஞ் சுரிகையுஞ் சொல்லும். (௫0௮)

கக௱0௯. கேடகத்தின்பெயர்—கேடகம்வட்டந் தட்டிகடகம் - வேதிகை கிடுகு பலகை கேடகம். (௫0௯)

கக௱௧0. *மாவட்டணத்தின் பெயர்—தட்டியம் பலகை தட்டோ வட்டணம். (௫௧0)

கக௱௧௧. தோற்பலகையின் பெயர்— தோற்பரந் தட்டுத் தோற்பலகை தோலுமாம். (௫௧௧)

கக௱௧௨. யானைப்புரசைக்கயிற்றின்பெயர்—தூசு கவடு புரசைக் கயிறெனல். (௫௧௨)

கக௱௧௩. யானைமுகபடாத்தின்பெயர்—சூழி படமே வேழ முகபடாம். ()

கக௱௧௪. மற்றும் யானைமுகபடாத்தின்பெயர்—மலையின் மந்தன மென்றுஞ் சொல்லும். (௫௧௪)

கக௱௧௫. யானைகட்டுந்தறியின்பெயர்—ஆளானம் வெளிலேயானை யணை தறி. (௫௧௫)

கக௱௧௬. யானைக்கச்சையின்பெயர்— கரியின் கச்சை கண்டமாகும். ()

கக௱௧௭. யானைமேற்றவிசின்பெயர்—இலகடம்பலகாரந்தவிசெனலாகும்.

கக௱௧௮. மற்றும் யானைமேற்றவிசின்பெயர்—மணையும் பலகையையு மப்பெயர்கூறும். (௫௧௮)

கக௱௧௯. குதிரைக்கலணையின்பெயர்—பருமமும் பண்ணும் படையும் பல்லணமும்- பரமு மென்றிவை பரிமாக் கலணை. ()

கக௱௨0. மற்றும் குதிரைக்கலணையின்பெயர்—சூழியும்பரிமாக் கலணையாகும். (௫௨0)

*மாவட்டணம் நெடும்பரிசை.

கசு0௩. கூர்மையின்பெயர்—வயிரம், வள், வசி, வை, அயில், நிசிதம், அள், பூ, ஆர். (௧)

கசு0௪. ஆயுதப்பொதுப்பெயர்—தானை, புடை, படைக்கலம், கருவி, எஃகு, வேல். (௬)

கசு0௫. மற்றும்ஆயுதப்பொதுப்பெயர்—துப்பு, ஏதி, சுதன்மம். ஆ_(௯)

கசு0௬. படையுறையின்பெயர்—தடவு, கருவிப்புட்டில். (௨)

செயற்கைவகை.

கசு0௭. கவசத்தின்பெயர்—ஆசு, தசனம், சடாரி, அரணம், பாசம், கண்டம், பருமம், கச்சை, சாலிகை, மாடிகை, கந்தளம், பாரம், மேழகம், கசை, மெய்புகுகருவி, சுடாரி. (கசு)

கசு0அ. மற்றுங்கவசத்தின்பெயர்—அந்தளம், அபரம், சுரிகை. ஆ_(கக)

கசு0௯. கேடகத்தின்பெயர்—கேடகம், வட்டம், தட்டி, கடகம், வேதிகை, கிடுகு, பலகை. (௭)

கசுக0. மாவட்டணத்தின்பெயர்—தட்டியம், பலகை, தட்டு. (௩)

கசுகக. தோற்பலகையின்பெயர்—தோற்பரம், தட்டு, தோல். (௩)

கசுக௨. யானைப்புரசைக்கயிற்றின்பெயர்—தூசு, கவடு. (௨)

கசுக௩. யானைமுகபடாத்திபெயர்—சூழி, படம். (௨)

கசுக௪. மற்றும்யானைமுகபடாத்தின்பெயர்—மந்தனம். ஆ_(௩)

கசுக௫. யானைகட்டுந்தறியின்பெயர்—ஆளானம், வெளில். (௨)

கசுகசு. யானைக்கச்சையின்பெயர்—கண்டம். (௧)

கசுக௭. யானைமேற்றவிசின்பெயர்—இலகடம், பலகாரம். (௨)

கசுகஅ. மற்றும்யானைமேற்றவிசின்பெயர்—மணை, பலகை. ஆ_(௪)

கசுக௯. குதிரைக்கலணையின்பெயர்—பருமம், பண், படை, பல்லணம், பரம். (௫)

கசு௨0. மற்றுங்குதிரைக்கலணையின்பெயர்—சூழி. ஆ_(சு)

௨௬௦௬. பாம்பின்படத்தின்பெயர்—பை, பணம். (௨)

௨௬௦௭. பாம்பின்படப்பொறியின்பெயர்—உத்தி, துத்தி. (௨)

௨௬௦௮. நஞ்சின்பெயர்—காளம், காரி, கரளம், நீலம், கரம், ஆலாலம், ஆலம், கடு, விடம். (௯)

௨௬௦௯. பாம்பினச்சுப்பல்லின்பெயர்—தட்டம். (௧)

௨௬௧௦. நாகரவண்டின்பெயர்—நொள்ளை. (௧)

௨௬௧௧. சிலந்தியின்பெயர்—சிலம்பி, உலூதை, காவன். (௩)

௨௬௧௨. உண்ணியின்பெயர்—உசு. (௧)

௨௬௧௩. நாங்கூழின்பெயர்—பூநாகம். (௧)

௨௬௧௪. உலண்டின்பெயர்—கோற்புழு, கீடம். (௨)

௨௬௧௫. புழுவின்பெயர்—கீடம், பொட்டு, கிருமி. (௩)

சலசரவகை.

௨௬௧௬. மகரமீனின்பெயர்—மான், சுறு, கலை. (௩)

௨௬௧௭. மற்றுமகரமீனின்பெயர்—மீனேறு. (௪)

௨௬௧௮. இருண்மீனின்பெயர்—இறவு. (௧)

௨௬௧௯. கெளிற்றுமீனின்பெயர்—கெளிறு, (௧)

௨௬௨௦. பெருமீனின்பெயர்—யானைமீன், பனைமீன், திமிலம். (௩)

௨௬௨௧. யானைமீனைவிழுங்குமீனின்பெயர்—திமிங்கிலம். (௧)

௨௬௨௨. அம்மீனைவிழுங்குமீனின்பெயர்—திமிங்கிலகிலம். (௧)

௨௬௨௩. ஆரான்மீனின்பெயர்—ஆரல் (௧)

௨௬௨௪. கெண்டைமீனின்பெயர்—சபரம். (௧)

௨௬௨௫. மலங்குமீனின்பெயர்—ஏனை, நூழை. (௨)

௨௬௨௬. அயிரையின்பெயர்—நொய்ம்மீன், சிறுமீன். (௨)

௨௬௨௭. மீன்பொதுப்பெயர்—மயிலை, மான், மச்சம், மீனம், புழல், (௫)

௨௬௨௮. முதலையின்பெயர்--சிஞ்சுமாரம், நிடங்கர், வன்மீன், கரா, கராம். (௫)

௨௬௨௯. ஆண்முதலையின்பெயர்—கரா. (௧)

உகூகூ0. சிப்பியின்பெயர்—இப்பி சுத்தி சிப்பி யாகும். (கூஉ0)

உகூகூக. பறவையென்னும்பெயர்—தோற்சிற கெல்லாம் பறவை யென ப்படும். (கூஉக)

உகூகூஉ. ஆமையின்பெயர்—கமடங் கூர்மங் கச்சப மூறுப்படக்கி-கடிப் புமாமைப் பெயராகும்மே. (கூஉஉ)

உகூகூகூ. பெண்ணுமையின்பெயர்—துளி பெண்ணுமை யாமெனச் சொல் லுப. (கூஉகூ)

உகூகூச. சங்கின்பெயர்—நந்து சுத்தி நாகு பணிலம் - வண்டு கோடு வளையே சுரிமுகங் - கம்பு வெள்ளை யிடம்புரி சங்கே. (கூஉச)

உகூகூரு. மற்றுஞ்சங்கின்பெயர்—தராவுமதன்பெயர்சாற்றப் பெறுமே. ()

உகூகூசு. வலம்புரிச்சங்கின்பெயர்—வலம்புரி கொக்கரை. (கூஉசு)

உகூகூஎ. சலஞ்சலத்தின்பெயர்—சலஞ்சலம் பணிலம். (கூஉஎ)

உகூகூஅ. இடம்புரிச்சங்கென்னும்பெயர்—இப்பி யாயிரஞ் சூழ்ந்த திடம் புரி. (கூஉஅ)

உகூகூகூ. வலம்புரிச்சங்கென்னும்பெயர்—இடம்புரி யாயிரஞ் சூழ்ந்தது வலம்புரி. (கூஉகூ)

உகூச0. சலஞ்சலமென்னும்பெயர்—வலம்புரி யாயிரஞ் சூழ்ந்தது சலஞ் சலம். (கூகூ0)

உகூசக. பாஞ்சசன்னியமென்னும்பெயர்—சலஞ்சலமா யிரஞ்சூழ்ந்தது பாஞ்ச சன்னியம். (கூகூக)

உகூசஉ. நத்தையின்பெயர்—கருநந்து நாகு சுரிமுக நத்தை. (கூகூஉ)

உகூசகூ. கிளிஞ்சிலின்பெயர்—ஏரலு மெருந்து மூரலுங் கிளிஞ்சில். ()

உகூசச. தவளையின்பெயர்—அரிமண் டேகந் தேரை தவளை. (கூகூச)

உகூசரு. மற்றுந்தவளையின்பெயர்—நுணலையும் பேகமு நுவல்பெயர் பெறுமே. (கூகூரு)

உகூசசு. ஞெண்டின்பெயர்—கள்வ னலவ னள்ளி கர்க்கடகங் - குளிரே கவைத்தாண் ஞெண்டின் கூற்றே. (கூகூசு)

உகூசஎ. ஆண்ஞெண்டின்பெயர்—அலவ னுண்ஞெண்டாகு மென்ப. ()

உகூசஅ. பலகறையின்பெயர்—பட்டி கவடி யலகு பலகறை. (கூகூஅ)

உகூசகூ. அட்டையின்பெயர்—உருவே சளுக மட்டையென மொழிப.()

எட்டாவது

மாப்பெயர்வகைமுற்றிற்று.

ஆ சூத்திரம் - உகூசகூ.

௨௬௩0. சிப்பியின்பெயர்—இப்பி, சுத்தி. (௨)

௨௬௩௧. பறவையென்னும் பெயர்—தோற்சிறகுள்ளனவற்றிற்கெல்லாம். (௩)

௨௬௩௨. ஆமையின்பெயர்—கமடம், கூர்மம், கச்சபம், உறுப்படக்கி, கடிப்பு. (௫)

௨௬௩௩. பெண்ணாமையின்பெயர்—துளி. (௧)

௨௬௩௪. சங்கின்பெயர்—நந்து, சுத்தி, நாகு, பணிலம், வண்டு, கோடு, வளை, சுரிமுகம், கம்பு, வெள்ளை, இடம்புரி. (௧௧)

௨௬௩௫. மற்றுஞ்சங்கின்பெயர்—சரா. (௧)

௨௬௩௬. வலம்புரிச்சங்கின்பெயர்—கோக்கரை. (௧)

௨௬௩௭. சலஞ்சலத்தின்பெயர்—பணிலம். (௧)

௨௬௩௮. இடம்புரிச்சங்கின்பெயர்—இப்பியாயிரஞ் சூழ்ந்தது.

௨௬௩௯. வலம்புரிச்சங்கென்னும்பெயர்—இடம்புரிச்சங்காயிரஞ் சூழ்ந்தது.

௨௬௪0. சலஞ்சலமென்னும்பெயர்—வலம்புரிச்சங்காயிரஞ்சூழ்ந்தது.

௨௬௪௧. பாஞ்சசன்னியமென்னும்பெயர்—சலஞ்சலச்சங்காயிரஞ்சூழ்ந்தது.

௨௬௪௨. நத்தையின்பெயர்—கருநந்து, நாகு, சுரிமுகம். (௩)

௨௬௪௩. கிளிஞ்சிலின்பெயர்—ஏரல், ஏருந்து, ஊரல். (௩)

௨௬௪௪. தவளையின்பெயர்—அரி, மண்டூகம், தேரை. (௩)

௨௬௪௫. மற்றுந்தவளையின்பெயர்—நுணலை, பேகம். ஆ_ (௨)

௨௬௪௬. ஞெண்டின்பெயர்—கள்வன், அலவன், நள்ளி, கர்க்கடகம், குளிர், கவைத்தாள். (௬)

௨௬௪௭. ஆண்ஞெண்டின்பெயர்—அலவன். (௧)

௨௬௪௮. பலகறையின்பெயர்—பட்டி, கவடி, அலகு. (௩)

௨௬௪௯. அட்டையின்பெயர்—உரு, சளுகம். (௨)

எட்டாவது

மாப்பெயர்வகைமுற்றிற்று.

---

ஒன்பதாவது.

# மரப்பெயர்வகை.

---

உகரு0. ஐந்தருவருக்கமாவன—சந்தானந் தேவதாரங் கற்பகம்—மந்தார
ம் பாரிசாதமைந்தருவருக்கம். (க)

உகருக. இவ்வைவகைமரத்தின்பெயர்—இம்மர மைந்துந் தெய்வமரமெ
ன்ப. (உ)

உகருஉ. கற்பகஞ்சேர்கொடியின்பெயா—கற்பகஞ் சேர்கொடிகாமவல்லி (௩)

உகரு௩. சந்தனமரத்தின்பெயர்—சாந்த மலயசஞ்சந்திர திலகமேய்ந்த
ாரஞ் சந்திவை சந்தனம். (௪)

உகரு௪. செஞ்சந்தனத்தின்பெயர்—பிசனஞ் செஞ்சந்தனத்தின் பெய
ர். (ரு)

உகருரு. அகிலின்பெயர்—அகருவும் பூழிலுங் காழ்வையுமகிலே. (சா)

உகருசா. மற்றும்அகிலின்பெயர்—பகரிற் காக துண்டமுமாகும். (எ)

உகருஎ. குங்குமமரத்தின்பெயர்—மரவமுந் துருக்கமுங் குங்குமமரமே. (அ)

உகருஅ. சண்பகத்தின்பெயர்—சம்பகஞ்செண்பகஞ் சண்பகமரமே. (கூ)

உகருகூ. சிறுசண்பகத்தின்பெயர்—சாதி மாலதி சிறுசண்பகமே. (க0)

உகசா0. செவ்வந்தியின்பெயர்—பட்டிகை செவ்வந்தி. (கக)

உகசாக. புரசைமரத்தினபெயர்—பிரமதருப் பலாசம் புரசைமரப் பெயர் (கஉ)

உகசாஉ. மற்றும்புரசைமரத்தின்பெயர்—புனமுருக் கென்றும் புகலப்
படுமே. (க௩)

உகசா௩. ஆலமரத்தின்பெயர்—வடமரந் தொன்மரம் பூதவங் கான்மரம்
ழுமர நியக்குரோதங் கோளியா லென்ப. (க௪)

உகசா௪. தேக்கின்பெயர்—சாதி சாகந் தேக்கந் தருவே. (கரு)

உகசாரு. வேங்கைமரத்தின்பெயர்—பீதசாலங்கணிதி மிசுதி மில் வேங்
கை. (கசா)

உகசாசா. கொன்றைமரத்தின்பெயர்—இதழிகடுக்கைதாமங்கொன்றை. ()

# பெயர்ப்பிரிவு.

உ௬௫0. ஐந்தருவருக்கமாவன—சந்தானம், தேவதாரம், கற்பகம், மந்தாரம், பாரிசாதம். (௫)

உ௬௫௧. இவ்வைவகைமரத்தின்பெயர்—தெய்வமரமென்றுகூறுவர்.

உ௬௫௨. கற்பகஞ்சேர்கொடியின்பெயர்—காமவல்லி. (௧)

உ௬௫௩. சந்தனமரத்தின்பெயர்—சாந்தம், மலயசம், சந்திரதிலகம், ஆரம், சந்து, (௫)

உ௬௫௪. செஞ்சந்தனத்தின்பெயர்—பிசனம். (௧)

உ௬௫௫. அகிலின்பெயர்—அகரு, பூழில், காழ்வை. (௩)

உ௬௫௬. மற்றும்அகிலின்பெயர்—காகதுண்டம். ஆ—(௪)

உ௬௫௭. குங்குமமரத்தின்பெயர்—மரவம், துருக்கம். (௨)

உ௬௫௮. சண்பகத்தின்பெயர்—சம்பகம், செண்பகம். (௨)

உ௬௫௯. சிறுசண்பகத்தின்பெயர்—சாதி, மாலதி. (௨)

உ௬௬0. செவ்வந்தியின்பெயர்—பட்டிகை. (௧)

உ௬௬௧. புரசைமரத்தின்பெயர்—பிரமதரு, பலாசம். (௨)

உ௬௬௨. மற்றும்புரசைமரத்தின்பெயர்—புனமுருக்கு. ஆ—(௩)

உ௬௬௩. ஆலமரத்தின்பெயர்—வடமரம், தொன்மரம், பூதவம், கான்மரம், பழுமரம், நியக்குரோதம், கோளி. (௭)

உ௬௬௪. தேக்கின்பெயர்—சாதி, சாகம். (௨)

உ௬௬௫. வேங்கைமரத்தின்பெயர்—பீதசாலம், கணி, திமிசு, திமில். (௪)

உ௬௬௬. கொன்றைமரத்தின்பெயர்—இதழி, கடுக்கை, தாமம். (௩)

உ௬௬எ. மற்றுங்கொன்றைமரத்தின்பெயர்—மதலை யார்க்கு வதமென்று
ரும். (௧அ)

உ௬௬அ. அரசின்பெயர்—சுவலையச் சுவத்தம் பிப்பலம் போதி திருமரங் -
குஞ்சராசனம் பணை கணவமரசு. (௧௯)

உ௬௬௯. ஆச்சாமரத்தின்பெயர்—சாலமராமர மாவுமாச்சா (உ0)

உ௬எ0. மகிழமரத்தின்பெயர்—வகுள மிலஞ்சி கேசர மகிழே. (உ௧)

உ௬எ௧. அசோகின்பெயர்—பிண்டி செயலைகா கோளி யசோகு. (உஉ)

உ௬எஉ. மருதின்பெயர்—அருச்சுனம் பூதவ மருதமாகும். (உ௩)

உ௬எ௩. இறலியின்பெயர்—இரத்தியிறலி. (உ௪)

உ௬எ௪. தான்றியின்பெயர்—கலித்துருமந்தான்றி. (உ௫)

உ௬எ௫. குராவின்பெயர்—கோட்டங்குடிலங்குராவாகும்மே. (உ௬)

உ௬எ௬. மற்றுங்குராவின்பெயர்—கோபி தாரமுங் குராமரமாகும். (உஎ)

உ௬எஎ. நாவலின்பெயர்—நாவலாருகதம் சம்பு நேரேடம் (உஅ)

உ௬எஅ. குழிநாவலின்பெயர்—சாதே வங்குழி நாவலாகும். (உ௯)

உ௬எ௯. வேம்பின்பெயர்—நிம்பம் வேம்பு பிசிதமு மாகும். (௩0)

உ௬அ0. அனிச்சமரத்தின்பெயர்—நறவஞ் சுள்ளி யருப்பலமனிச்சம். ()

உ௬அ௧. பாதிரியின்பெயர்—பாடலம் புன்காலி பாதிரி யாகும். (௩உ)

உ௬அஉ. ஞாழலின்பெயர்—நாகம் பலினி ஞாழலாகும். (௩௩)

உ௬அ௩. கோங்கின்பெயர்—கன்னி காரந் துருமோற் பலமே - குயாக
ல்பிணரோ கோங்கா கும்மே. (௩௪)

உ௬அ௪. நாரத்தையின்பெயர்—நார நரந்த நாரங்க நாரத்தை. (௩௫)

உ௬அ௫. குமிழின்பெயர்—கூம்பல் கடம்பல் குமிழெனக் கூறப. (௩௬)

உ௬அ௬. அதிமதுரத்தின்பெயர்—யட்டி மதுரமதுக மதிங்கம்—தட்டின்
றுனைப்பிற் சல்லியு மதுவே. (௩எ)

உ௬அஎ. மஞ்சாடிமரத்தின்பெயர்—திலகமஞ்சாடி. (௩அ)

உ௬அஅ. குடைவேலின்பெயர்—உடைகுடைவேலே. (௩௯)

உ௬அ௯. புன்னையின்பெயர்—புன்னைபுன்னாகம். (௪0)

உ௬௯0. சுரபுன்னையின்பெயர்—வழைசுரபுன்னை. (௪௧)

உ௬௯௧. வெட்சியின்பெயர்—சிந்தூரமுங் குல்லையுஞ் செச்சையும் வெ
ட்சி. (௪உ)

உ௬௯உ. செருந்தியின்பெயர்—பஞ்சரஞ் செருந்தி செங்கோடு மாகும் )

உ௬௯௩. அலரியின்பெயர்—கவீரங் கணவீரங் கரவீர மலரி. (௪௪)

உ௬௯௪. மற்றுமலரியின்பெயர்—அயமர மடுக்கு மென்ப தாகும். (௪௫)

உ௬௯௫. முண்முருக்கின்பெயர்—கவிரோ கிஞ்சுக முண்முருக் காகும் ()

௨௬௬௭. மற்றுங்கொன்றைமரத்தின்பெயர்—மதலை, ஆர்க்குவதம். ஆ (௫)

௨௬௬௮. அரசின்பெயர்—சுவலை, அச்சுவத்தம், பிப்பலம், போதி, திருமரம், குஞ்சராசனம், பணை, கணவம். (௮)

௨௬௬௯. ஆச்சாமரத்தின்பெயர்—சாலம், மராமரம், ஆ. (௩)

௨௬௭0. மகிழமரத்தின்பெயர்—வகுளம், இலஞ்சி, கேசரம். (௩)

௨௬௭௧. அசோகின்பெயர்—பிண்டி, செயலை, காகோளி. (௩)

௨௬௭௨. மருதின்பெயர்—அருச்சுனம், பூதவம். (௨)

௨௬௭௩. இறலியின்பெயர்—இரத்தி. (௧)

௨௬௭௪. தான்றியின்பெயர்—கலித்துருமம். (௧)

௨௬௭௫. குராவின்பெயர்—கோட்டம், குடிலம். (௨)

௨௬௭௬. மற்றுங்குராவின்பெயர்—கோபிதாரம். ஆ (௩)

௨௬௭௭. நாவலின்பெயர்—ஆருகதம், சம்பு, நேரேடம். (௩)

௨௬௭௮. குழிநாவலின்பெயர்—சாதேவம். (௧)

௨௬௭௯. வேம்பின்பெயர்—நிம்பம், பிசிதம். (௨)

௨௬௮0. அனிச்சமரத்தின்பெயர்—நறவம், சுள்ளி, அருப்பலம். (௩)

௨௬௮௧. பாதிரியின்பெயர்—பாடலம், புன்காலி. (௨)

௨௬௮௨. ஞாழலின்பெயர்—நாகம், பலினி. (௨)

௨௬௮௩. கோங்கின்பெயர்—கன்னிகாரம், துருமோற்பலம், குயா, பிணர். (௪)

௨௬௮௪. நாரத்தையின்பெயர்—நாரம், நரந்தம், நாரங்கம். (௩)

௨௬௮௫. குமிழின்பெயர்—கூம்பல், கடம்பல். (௨)

௨௬௮௬. அதிமதுரத்தின்பெயர்—யட்டி, மதுகம், அதிங்கம், சல்லி. (௪)

௨௬௮௭. மஞ்சாடிமரத்தின்பெயர்—திலகம். (௧)

௨௬௮௮. குடைவேலின்பெயர்—உடை. (௧)

௨௬௮௯. புன்னையின்பெயர்—புன்னாகம். (௧)

௨௬௯0. சுரபுன்னையின்பெயர்—வழை. (௧)

௨௬௯௧. வெட்சியின்பெயர்—சிந்தூரம், குல்லை, செச்சை. (௩)

௨௬௯௨. செருந்தியின்பெயர்—பஞ்சரம், செங்கோடு. (௨)

௨௬௯௩. அலரியின்பெயர்—கவீரம், கணவீரம், கரவீரம். (௩)

௨௬௯௪. மற்றுமலரியின்பெயர்—அயமரம், அடுக்கு. ஆ (௫)

௨௬௯௫. முண்முருக்கின்பெயர்—கவிர், கிஞ்சுகம். (௨)

உசுகரு. பெருங்குறிஞ்சியின்பெயர்—கோரண்டம் குரண்டகம் *பெருங் குறிஞ்சி யாகும். (சன)

உசுகன. பொன்வண்ணக்குறிஞ்சியின்பெயர்—பீதை பொன்வண்ணக் குறிஞ்சி யாகும். (சஅ)

உசுகஅ. வாடாக்குறிஞ்சியின்பெயர்—குரவகம்வாடாக் குறிஞ்சி யாகும்.)

உசுகக. மழைவண்ணக் குறிஞ்சியின் பெயர்—பாணநீலி மழைவண்ணக் குறிஞ்சி. (ருo)

உஎ00. பவளக்குறிஞ்சியின்பெயர்—நீடு நீண்டியம் பவளக் குறிஞ்சி.()

உஎ0க. மகரவாழையின்பெயர்—மருகுந்தானமு மகரவாழை. (ருஉ.)

உஎ0உ. இருவேலியின்பெயர்—வேரிபீ தகமூல கந்தமிரு வேலி. (ருங)

உஎ0ங. குருக்கத்தியின்பெயர்—அதிக முத்தக மாதவி வாசந்தி—குருகு நாகரி யிவை, குருக்கத்தியாகும். (ருச)

உஎ0ச. பலாவின்பெயர்—பாகல் வருக்கை பனசம் பலாவே. (ருரு)

உஎ0ரு. ஈரப்பலாவின்பெயர்—ஆசினி பலாச மீரப் பலாவே. (ருசு)

உஎ0சு. மாமரத்தின்பெயர்—மாந்தியுஞ் சூதமுங் கொக்கு மாவு—மாமிரமுமாழையு மாமர மாகும். (ருஎ)

உஎ0எ. புளிமாவின்பெயர்—நாளினி யிபங்க மாழை சிஞ்ச - மாம்பிரமெகினஞ் சூதம் புளிமா. (ருஅ)

உஎ0அ. தேமாவின்பெயர்—ஆமிரஞ் சககாரஞ் சேதாரந் தேமா. (ருக)

உஎ0க. புளியமரத்தின்பெயர்—சிந்தூரஞ் சிந்தகந் திந்திருணி யெகினஞ் - சஞ்சீவ கரணி யாம்பிலம் புளியே. (சுO)

உஎக0. இலவின்பெயர்—பொங்கர் சான்மலி பூரணியிலவே. (சுக)

உஎகக. இலந்தையின்பெயர்—குல்லரி குவலி கோற்கொடி கோலி—இரத்திவதரி யிலந்தையாகும். (சுஉ)

உஎகஉ. இலந்தைப்பழத்தின்பெயர்—அதன்பழங் கோலமுங் கோண்டையுமாகும். (சுங)

உஎகங. அத்தியின்பெயர்—அதவே கோளி யுதும்பர மத்தி. (சுச)

உஎகச. விளாவின்பெயர்—விளவு கபித்தம் வெள்ளில் விளாவே. (சுரு)

உஎகரு. காயாவின்பெயர்—பூவை யஞ்சனி யல்லிபுன்காலி-காசை வச்சி காயா வாகும், (சுசு)

உஎகசு. களாவின்பெயர்—களவங்களாவே. (சுஎ)

---

* குறிஞ்சி மருதோன்றி. இதுஐந்துவகைப்படுதலால் ஐவ்வண்ணம்எனக் காரணப் பெயர்பெறும்.

உ௬௬௬. பெருங்குறிஞ்சியின்பெயர்—கோரண்டம், குரண்டகம். (உ)

உ௬௬௭. பொன்வண்ணக்குறிஞ்சியின்பெயர்—பீதை. (க)

உ௬௬௮. வாடாக்குறிஞ்சியின்பெயர்—குரவகம். (க)

உ௬௬௯. மழைவண்ணக்குறிஞ்சியின்பெயர்—பாணம், நீலி. (உ)

உ௭௦௦. பவளக்குறிஞ்சியின்பெயர்—தீண்டியம்.

உ௭௦௧. மகரவாழையின்பெயர்—மருகு, தானம். (உ)

உ௭௦௨. இருவேலியின்பெயர்—வேரி, பீதகம், மூலகந்தம். (௩)

உ௭௦௩. குருக்கத்தியின்பெயர்—அதிகம், முத்தகம், மாதவி, வாசந்தி, நருகு, நாகரி. (௬)

உ௭௦௪. பலாவின்பெயர்—பாகல், வருக்கை, பனசம். (௩)

உ௭௦௫. ஈரப்பலாவின்பெயர்—ஆசினி, பலாசம். (உ)

உ௭௦௬. மாமரத்தின்பெயர்—மாந்தி, சூதம், கொக்கு, மா, ஆமிரம், ரழை. (௬)

உ௭௦௭. புளிமாவின்பெயர்—நாளினி, இபங்கம், மாழை, சிஞ்சம், ஆம்ரம், எகினம், சூதம். (௭)

உ௭௦௮. தேமாவின்பெயர்—ஆமிரம், சககாரம், சேதாரம். (௩)

உ௭௦௯. புளியமரத்தின்பெயர்—சிந்தூரம், சிந்தகம், திந்திருணி, எகினம், ஞ்சீவகரணி, ஆம்பிலம். (௬)

உ௭௧௦. இலவின்பெயர்—பொங்கர், சான்மலி, பூரணி. (௩)

உ௭௧௧. இலந்தையின்பெயர்—குல்லரி, குவலி, கோற்கொடி, கோலி, ரத்தி, வதரி (௬)

உ௭௧௨. இலந்தைப்பழத்தின்பெயர்—கோலம், கோண்டை. (உ)

உ௭௧௩. அத்தியின்பெயர்—அதவு, கோளி, உதும்பரம். (௩)

உ௭௧௪. விளாவின்பெயர் விளவு, கபித்தம், வெள்ளில். (௩)

உ௭௧௫. காயாவின்பெயர்—பூவை, அஞ்சனி, அல்லி, புன்காலி, காசை, ச்சி. (௬)

உ௭௧௬. களாவின்பெயர்—களவு. (க)

உ௭௧௭. நுணாவின்பெயர்—தணக்கு நுணாவே. (௬௮)

உ௭௧௮. எலுமிச்சையின்பெயர்—சம்பீர முருகு சதாபலஞ் சம்பள - மரு ணமிலிருச மெலுமிச்சையாகும். (௬௯)

உ௭௧௯. நெல்லியின்பெயர்—ஆமலக நெல்லி யாகு மென்ப. (௭௦)

உ௭உ0. கடுக்காய்மரத்தின்பெயர்—அரிதகி கடுவேபத்தியங் கடுக்காய்.()

உ௭உ௧. மாதுளையின்பெயர்—மாதுளங்க மாதுளங்கழுமுண்மாதுளையே.

உ௭உஉ. தாதுமாதுளையின்பெயர்—தாடிமந் தாது மாதுளையென்ப. (௭௩)

உ௭உ௩. வில்வத்தின்பெயர்—கூவிளம் வில்வமாலூரங் கூவிளை. (௭௪)

உ௭உ௪. மற்றும்வில்வத்தின்பெயர்—மாவிளம்வில்லுவ மற்றதன்பெயரே.

உ௭உ௫. வஞ்சியின்பெயர்—வானீரம்பிசின் வஞ்சியாகும். (௭௬)

உ௭உ௬. செங்கருங்காலியின்பெயர்—சிறுமாரோடஞ் செங்கருங்காலி. ()

உ௭உ௭. கருங்காலியின்பெயர்—கதிரங்கருங்காலி. (௭௮)

உ௭உ௮. ஈந்தின்பெயர்—கர்ச்சூர மீந்தே. (௭௯)

உ௭உ௯. வெட்பாலையின்பெயர்—குடசங் கிரிமல்லிகை வெட்பாலை. ()

உ௭௩0. அழிஞ்சிலின்பெயர்—அழிஞ்சில் சேமர மங்கோலமாகும். (௮௧)

உ௭௩௧. கடம்பின்பெயர்—கதம்பமும் விசாலமு நீபமுங் கடம்பே.(௮உ)

உ௭௩உ. மற்றுங்கடம்பின்பெயர்—இந்துள மராவும் வந்துழிக் கொளலே.

உ௭௩௩. குருந்தமரத்தின்பெயர்—குந்தங்குருந்தே. (௮௪)

உ௭௩௪. செம்பரத்தையின்பெயர்—மந்தாரஞ் செம்பரத்தை யாமெனவு குப்பர். (௮௫)

உ௭௩௫. வெண்ணொச்சியின்பெயர்—சிந்து வார நீர்க் குன்டி வெண் ணொச்சி. (௮௬)

உ௭௩௬. தேற்றுமரத்தின்பெயர்—சில்ல மில்லங் கதலிகந் தேற்றே.(௮௭)

உ௭௩௭. ஆத்தியின்பெயர்—ஆரேதாதகி சல்லகி யாத்தி. (௮௮)

உ௭௩௮. அகத்தியின்பெயர்—அச்சமுனியே கரீரமகத்தி. (௮௯)

உ௭௩௯. பச்சிலைமரத்தின்பெயர்—பச்சிலை தமாலம் பசும்பிடி யாகும். (௯0)

உ௭௪0. முருங்கையின்பெயர்—கருஞ்சனஞ் சிக்குரு முருங்கை யாகும்.

உ௭௪௧. எட்டியின்பெயர்—காளங் காஞ்சிரை கோடர மெட்டி. (௯உ)

உ௭௪உ. சதுரக்கள்ளியின்பெயர்—வச்சி ராங்கங் கண்டீர்வ மயிலி-வச்சிர ம் லிருக்கஞ் சதுரக்கள்ளி. (௯௩)

உ௭௪௩. வாகையின்பெயர்—சிரீடம் பான்டில் வாகை யாகும். (௯௪)

உ௭௪௪. ஓடையின்பெயர்—உலவைவயோடை. (௯௫)

உ௭௪௫. உழிஞ்சிலின்பெயர்—உன்னமுழிஞ்சில். (௯௬)

உ௭௪௬. சீக்கிரியின்பெயர்—முன்னந்தூரிஞ்சி லுசிலை சீக்கிரி. (௯௭)

உ௭௧௭. நுணவின்பெயர்—தணக்கு. (௧)

உ௭௧௮. எலுமிச்சையின்பெயர்—சம்பீரம், முருகு, சதாபலம், சம்பளம், அருணம். இலிகுசம். (௬)

உ௭௧௯. நெல்லியின்பெயர்—ஆமலகம். (௧)

உ௭௨0. கடுக்காய்மரத்தின்பெயர்—அரிதகி, கடு, பத்தியம். (௩)

உ௭௨௧. மாதுளையின்பெயர்—மாதுளங்கம், மாதுளம், கழுமுள். (௩)

உ௭௨௨. தாதுமாதுளையின்பெயர்—தாடிமம். (௧)

உ௭௨௩. வில்வத்தின்பெயர்—கூவிளம், மாலூரம், கூவிளை. (௩)

உ௭௨௪. மற்றும்வில்வத்தின்பெயர்—மாவிளம், வில்லுவம். ஆ (௫)

உ௭௨௫. வஞ்சியின்பெயர்—வானீரம், பிசின். (௨)

உ௭௨௬. செங்கருங்காலியின்பெயர்—சிறுமாரோடம். (௧)

உ௭௨௭. கருங்காலியின்பெயர்—கதிரம். (௧)

உ௭௨௮. ஈந்தின்பெயர்—கர்ச்சூரம். (௧)

உ௭௨௯. வெட்பாலையின்பெயர்—குடசம், கிரிமல்லிகை. (௨)

உ௭௩0. அழிஞ்சிலின்பெயர்—சேமரம், அங்கோலம். (௨)

உ௭௩௧. கடம்பின்பெயர்—கதம்பம், விசாலம், நீபம். (௩)

உ௭௩௨. மற்றுங்கடம்பின்பெயர்—இந்துளம், மரா. ஆ (௫)

உ௭௩௩. குருந்தமரத்தின்பெயர்—குந்தம். (௧)

உ௭௩௪. செம்பரத்தையின்பெயர்—மந்தாரம். (௧)

உ௭௩௫. வெண்ணொச்சியின்பெயர்—சிந்துவாரம், நீர்க்குண்டி. (௨)

உ௭௩௬. தேற்றுமரத்தின்பெயர்—சில்லம், இல்லம், கதலிகம். (௩)

உ௭௩௭. ஆத்தியின்பெயர்—ஆர், தாதகி, சல்லகி. (௩)

உ௭௩௮. அகத்தியின்பெயர்—அச்சம், முனி, கரீரம். (௩)

உ௭௩௯. பச்சிலைமரத்தின்பெயர்—தமாலம்,பசும்பிடி. (௨)

உ௭௪0. முருக்கையின்பெயர்—கருஞ்சனம், சிக்குரு. (௨)

உ௭௪௧. எட்டியின்பெயர்—காளம், காஞ்சிரை, கோடரம். (௩)

உ௭௪௨. சதுரக்கள்ளியின்பெயர்—வச்சிராங்கம், கண்டீரவம், அயிலி, வச்சிர விருக்கம். (௪)

உ௭௪௩. வாகையின்பெயர்—சிரீடம், பாண்டில். (௨)

உ௭௪௪. ஓடையின்பெயர்—உலவை. (௧)

உ௭௪௫. உழிஞ்சிலின்பெயர்—உன்னம். (௧)

உ௭௪௬. சிக்கிரியின்பெயர்—முன்னம், துரிஞ்சில், உசிலை. (௩)

உஎசஎ. இலுப்பையின்பெயர்—குலிக மிருப்பை மதூகமிலுப்பை. (கூஅ)

உஎசஅ. மற்றுமிலுப்பையின்பெயர்—சந்தானகரணி யெனவுஞ் சாற்றும்.

உஎசகூ. தெங்கின்பெயர்—தாழையிலாங்கலி தென்னையுந் தெங்கே. (க௦௦)

உஎ௫௦. மற்றுந்தெங்கின்பெயர்—நாளி கேர மென்பது நவிலும். (க௦க)

உஎ௫க. பன்னாடையின்பெயர்—நாரி நெய்யரி யதன்பன்னாடை. (க௦உ)

உஎ௫உ. கமுகின்பெயர்—கந்தி பூகம் பூக்கமுங் கமுகே. (க௦௩)

உஎ௫௩. கூந்தற்கமுகின்பெயர்—தாலங்கூந்தற் கமுகாகும்மே. (க௦௪)

உஎ௫௪. பாக்கின்பெயர்—கோலந் துவர்க்காய் பாகு பாக்கே. (க௦௫)

உஎ௫௫. பனையின்பெயர்—போந்துதாலம் பெண்ணைபுற்பதி - தாளிகரும் புறம்புற்றாளியும்பனை. (க௦௬)

உஎ௫௬. இளம்பனையின்பெயர்—போந்தையிளம்பனை. (க௦எ)

உஎ௫எ. கூந்தற்பனையின்பெயர்—தாளிகூந்தற்பனை. (க௦அ)

உஎ௫அ. வாழையின்பெயர்—கதலி யரம்பை கவர் சேகிலி - திரணபதி யோசை வாழையின்பெயரே. (க௦கூ)

உஎ௫கூ. மூங்கிலின்பெயர்—வெதிரும் வேயும் விண்டும் விண்டலும் - பணையுநெடிலும் வரையு மரியுந்—தட்டையுந் திகிரியுந் தடமு மமையும் - வேரலுங் கழையுந் தூம்பும் வேழமுங்-காம்புங் கிளையுங் கீசகமும் வேணு - மோங்கலு முளையு முடங்கலுஞ் சந்தியு- மூங்கிலின் பெயர் முந்நூழு மாகும். (கக௦)

உஎ௬௦. மற்றுமூங்கிலின்பெயர்—சானகி திரிக வேணமி பாதிரி-யாம்பற்றாளையுஞ் சபமுமதன்பெயர். (ககக)

உஎ௬க. மூங்கிலரிசியின்பெயர்—வேர ரோனை மூங்கிலரிசிப்பெயர். ()

உஎ௬உ. தாழையின்பெயர்—முண்டக மடியே கைதை முடங்கல்- கண்டல் கேதகை முசலிதாழை. (கக௩)

உஎ௬௩. பட்டிகையின்பெயர்—பறிவைபட்டிகை. (கக௪)

உஎ௬௪. கரும்பின்பெயர்—கழைவேழ மிக்குக் கன்னல்கரும்பே. (கக௫)

உஎ௬௫. பூவாதுகாய்க்குமரத்தின்பெயர்—கோளி பூவாது காய்க்கு மரமே. (கக௬)

உஎ௬௬. மற்றும்பூவாதுகாய்க்குமரத்தின்பெயர்—வானரப் பிரத்தி பத்திமும் வரையார். (ககஎ)

உஎ௬எ. வண்டுணாமலர்மரமாவன—சண்பகமும் வேங்கையும் வண்டுணா மலர்மரம். (ககஅ)

உஎ௬அ. வன்னிமரத்தின்பெயர்—கலிசஞ் சமியே குலிசம்வன்னி. ()

உஎ௬கூ. ஓமைமரத்தின்பெயர்—ஓமையுகாவே. (க௨௦)

உஎஎ௦. புனமுருங்கையின்பெயர்—புன்குபுனமுருங்கை. (க௨க)

உஎ௪எ. இலுப்பையின்பெயர்—குலிகம், இருப்பை, மதூகம். (௩)

உஎ௪அ. மற்றுமிலுப்பையின்பெயர்—சந்தானகரணி. ஆ (௪)

உஎ௪௯. தெங்கின்பெயர்—தாழை, இலாங்கலி, தென்னை. (௩)

உஎ௫0. மற்றுந்தெங்கின்பெயர்—நாளிகேரம். ஆ (௪)

உஎ௫க. பன்றுடையின்பெயர்—நாரி, நெய்யரி. (உ)

உஎ௫உ. கமுகின்பெயர்—கந்தி, பூகம், பூக்கம். (௩)

உஎ௫௩. கூந்தற்கமுகின்பெயர்—தாலம். (க)

உஎ௫௪. பாக்கின்பெயர்—கோலம், துவர்க்காய்,பாகு. (௩)

உஎ௫௫. பனையின்பெயர்—போந்து, தாலம், பெண்ணை, புற்பதி, தாளி கரும்புறம், புற்றாளி. (எ)

உஎ௫௬. இளம்பனையின்பெயர்—போந்தை. (க)

உஎ௫எ. கூந்தற்பனையின்பெயர்—தாளி. (க)

உஎ௫அ. வாழையின்பெயர்—கதலி, அரம்பை, கவர், சேகிலி, திரணபதி ஓசை. (௬)

உஎ௫௯. மூங்கிலின்பெயர்—வெதிர், வேய், விண்டு, விண்டல்,பணை,நெடில், வரை, அரி, தட்டை, திகிரி, தடம், அமை, வேரல், கழை, தூம்பு, வேழம், காம்பு, கிளை, கீசகம், வேணு, ஓங்கல், முளை, முடங்கல், சந்தி, மூங்றூழ் (உ௫)

உஎ௬0. மற்றுமூங்கிலின்பெயர்—சாணகி, திரிகண், நேமி, பாதிரி, ஆம்பல், தொளை, சபம். ஆ (௩உ)

உஎ௬க. மூங்கிலரிசியின்பெயர்—வேரல், தோரை. (உ)

உஎ௬உ. தாழையின்பெயர்—முண்டகம், மடி, கைதை, முடங்கல், கண்டல், கேதகை, முசலி. (எ)

உஎ௬௩. பட்டிகையின்பெயர்—பறிவை. (க)

உஎ௬௪. கரும்பின்பெயர்—கழை, வேழம், இக்கு, கன்னல். (௪)

உஎ௬௫. பூவாதுகாய்க்குமரத்தின்பெயர்—கோளி. (க)

உஎ௬௬. மற்றும்பூவாதுகாய்க்குமரத்தின்பெயர்—வானப் பிரத்தி, பத்தியம். (உ)

உஎ௬எ. வண்டுணுமலர்மரமாவன—சண்பகம், வேங்கை. (உ)

உஎ௬அ. வன்னிமரத்தின்பெயர்—கலிசம், சமி, குலிசம் (௩)

உஎ௬௯. ஓமைமரத்தின்பெயர்—உகா. (க)

உஎஎ0. புனமுருங்கையின்பெயர்—புன்கு. (க)

உளஎக. ஓடுவின்பெயர்—ஓடுவேயுடுப்பை. (கஉஉ)

உளஎஉ. புன்கின்பெயர்—நத்தமாலம் புன்கு காஞ்சனமு நவிலும். ()

உளஎங. ஆண்மரத்தின்பெயர்—எகினே சேமர மாண்மர மென்ப. ()

உளஎச. பராய்மரத்தின்பெயர்—பசுநாவிட்டில்புக்குப்பராய்மரம் (கஉரு)

உளஎரு. நறுவிலியின்பெயர்—அலியுஞ்செலுவும் வலியு நறுவிலி. (கஉசு)

உளஎசு. செம்புளிச்சையின்பெயர்—தேவ தாரஞ் செம் புளிச்சை யென்ப. (கஉஎ)

உளஎஎபுனவெலுமிச்சையின்பெயர்—புனவெலு மிச்சை குருந்தெனப் புகலுவர். (கஉஅ)

உளஎஅ. எருக்கின்பெயர்—அருக்கஞ் சல்லியகரணி யெருக்கே. (கஉகூ)

உளஎகூ. ஆமணக்கின்பெயர்—எரண்டஞ்சித்திரமென்பதாமணக்கே. ()

உளஅ0. பருத்தியின்பெயர்—பரியேபன்னல் கார்ப் பாசம்பருத்தி. (கஙக)

உளஅக. மருந்தென்னும்பெயர்—புல்லு மரனும் புதலும் பூடும் - வல்லியும் பெயர்பெறுமருத்துச் சஞ்சீவி. (கஙஉ)

உளஅஉ. நால்வகைமருந்தாவன—சல்லிய கரணி சந்தான கரணி - சமனியகரணி முதலி லுதித்த - மிருதசஞ்சீவனி மருந்துநால் வகையே. கஙங

உளஅங. அத்திரசத்திரந்தைத்த புண்மாற்றுமருந்தின்பெயர்— தைத்தவத்திரஞ் சத்திரந்தணிக்கு—மெய்த்தருமருந்தேசல்லிய கரணி. கஙச

உளஅச. துணிபட்டவுறுப்பினைப் பொருத்துமருந்தின்பெயர்—துண்டமான வுறுப்புத் துணியினைச், சந்து செய் மருந்தே சந்தானகரணி. (கஙரு)

உளஅரு. விரணந்தழும்புகளைநீக்குமருந்தின்பெயர்—விரணமுந் தழும்பு நீக்கி மெய்யினைத்—தகைமைசெய் மருந்தே சமனியகரணி. (கஙசு)

உளஅசு. உயிர்தருமருந்தின்பெயர்—உயிர்தருமருந்தே மிருதசஞ்சீவனி.

உளஅஎ. மற்றுமுயிர்தருமருந்தின்பெயர்—அதகமுமமுதுஞ் சீவனியுமென்ன—வுயிர்தரு மருந்தினுறுபெயராகும். (கஙஅ)

உளஅஅ. நோய்தீர்க்குமருந்தின்பெயர்—உறுநோய்தீர்க்கும் மருந்துறை யென்ப. (கஙகூ)

உளஅகூ. மருந்தின்பெயர்—உறையே குளிய மோடதி யௌடத - மதகமும் யோகமு மருந்தெனலாகும். (கச0)

உளகூ0. மரப்பொதுவின் பெயர்—பாதபந் தாரு தருவே தாவர-மோதிய மூலமரப்பொதுப்பெயரே. (கசக)

உளகூக. மற்றுமரப்பொதுப்பெயர்—அகமேயங் கிரி விருக்கந் துருமமகலியஞ் சாதியென் றனைத்து மப்பெயரே. (கசஉ)

உ௭௭௧. ஒடுவின்பெயர்—உடுப்பை. (௧)

உ௭௭௨. புன்கின்பெயர்—நத்தமாலம், காஞ்சனம். (௨)

உ௭௭௩. ஆண்மரத்தின்பெயர்—எகின், சேமரம். (௨)

உ௭௭௪. பராய்மரத்தின்பெயர்—பசுநா, விட்டில், புக்கு. (௩)

உ௭௭௫. நறுவிலியின்பெயர்—அலி, செலு, வலி. (௩)

உ௭௭௬. செம்புளிச்சையின்பெயர்—தேவதாரம் (௧)

உ௭௭௭. புனவெலுமிச்சையின்பெயர்—குருந்து. (௧)

உ௭௭௮. எருக்கின்பெயர்—அருக்கம், சல்லியகரணி. (௨)

உ௭௭௯. ஆமணக்கின்பெயர்—எரண்டம், சித்திரம். (௨)

உ௭௮0. பருத்தியின்பெயர்—பரி, பன்னல், கார்ப்பாசம். (௩)

உ௭௮௧. மருந்தென்னும்பெயர்—புல், மரம், புதல், பூடு, வல்லி-கொடி சஞ்சீவி. (௭)

உ௭௮௨. நால்வகைமருந்தாவன—சல்லியகரணி, சந்தானகரணி, சமனியகரணி, மிருதசஞ்சீவனி. (௪)

உ௭௮௩. அத்திரசததிரங்தைத்த புண்மாற்றுமருந்தின்பெயர்—சல்லியகரணி. (௧)

உ௭௮௪. துணிபட்ட வுறுப்பினைப்பொருத்து மருந்தின்பெயர்—சந்தானகரணி. (௧)

உ௭௮௫. விரணந்தழும்புகளைநீக்குமருந்தின்பெயர்—சமனியகரணி. (௧)

உ௭௮௬. உயிர்தருமருந்தின்பெயர்—மிருதசஞ்சீவனி. (௧)

உ௭௮௭. மற்றுமுயிர்தருமருந்தின்பெயர்—அதகம், அமுது, சீவனி. ஆ (௪)

உ௭௮௮. நோய்தீர்க்குமருந்தின்பெயர்—உறை. (௧)

உ௭௮௯. மருந்தின்பெயர்—உறை, குளியம், ஒடதி, ஔடதம், அதகம், யோகம். (௬)

உ௭௯0. மரப்பொதுவின்பெயர்—பாதபம், தாரு, தரு, தாவரம், மூலம் (௫)

உ௭௯௧. மற்றுமரப்பொதுப்பெயர்—அகம், அங்கிரி, விருக்கம, துருமம் அகலியம், சாகி. (௬)

உ௭௬௨. மரக்கன்றின்பெயர்—போதகம் பிள்ளைபோத்துக் குழவி-காவிள மரத்தின் கன்றின்பெயரே. (௧௬௩)

உ௭௬௩. மரவுரியின்பெயர்—மரத்தோல் வற்கலை சீரை மரவுரி. (௧௬௪)

உ௭௬௪. மற்றுமரவுரியின்பெயர்—இறைஞ்சியு மதற்கு வியைந்த பெய ரே. (௧௬௫)

உ௭௬௫. மரக்கொம்பின்பெயர்—சோடே விடபங் கோடரம் பொங்கர்-சாகை கவடு வுலவை தாருச்-சினைபணை கொம்பர் கவலைமரக்கொம்பே. (௧௬௬)

உ௭௬௬. சேகின்பெயர்—சம்ப மாசினி காழே காழ்ப்புச் - சாரம் வயிரங் கலையரி சேகெனல். (௧௬௭)

உ௭௬௭. தழையின்பெயர்—உலவை தழையே. (௧௬௮)

உ௭௬௮. கப்பின்பெயர்—கவையுங் கவரும் கப்பெனலாகும். (௧௬௯)

உ௭௬௯. இளங்கொம்பின்பெயர்—வளாஅர் மெல்லியன் மற்றிளங்கொம் பே. (௧௭௦)

உ௮௦௦. தளிரின்பெயர்—வல்லரி குழைமுறி மஞ்சரி கிசலயம் - பல்லவ மலங்கல்கிளை பைந்தளிரெனல். (௧௭௧)

உ௮௦௧. தளிர்த்தலின்பெயர்—இலிர்த்தலுஞ் சிலிர்த்தலுங் குழைத்தலுந் தளிர்த்தல். (௧௭௨)

உ௮௦௨. அடிவெண்குருத்தின்பெயர்—முருந்தே முதலிற் செறிவெண் குருத்தே. (௧௭௩)

உ௮௦௩. மலர்க்கொத்தின்பெயர்—தொத்துமஞ்சரி துணரிணர் தொடர்ச்சி-மற்றிவையனைத்து மலர்க்கொத்தென்ப. (௧௭௪)

உ௮௦௪. இலையின்பெயர்—பலாசம் பன்னம் பத்திரந்தகடு - பாசடைத ண்ணடை சாகை தமால—மோலைதழை பச்சிலை யுலவையடை யிலைப் பெ யர். (௧௭௫)

உ௮௦௫. மற்றுமிலையின்பெயர்—சதனஞ் சதம்பத் திரிதலமு மாகும். ()

உ௮௦௬. பரலினுட்படுகுருத்தின்பெயர்—பயினே பரலி னுட்படு குருத் தே. (௧௭௭)

உ௮௦௭. மொட்டின்பெயர்—கலுவட நனைமுகை கன்னிகை யரும்பே - முகிளங் கலிகை சாலகங் கோரகம்-போகினகை மலரு மொக்குண்மொட்டெ ன்ப. (௧௭௮)

உ௮௦௮. மலரின்பெயர்—தாமங் குசுமந் தாரேயலர்வீ - போதுசுண்ணஞ் சுமனசம் பூவே - சுமந்துண ரலரி யாலநன் மலர்ப்பெயர். (௧௭௯)

௨௭௯௨. மரக்கன்றின்பெயர்—போதகம், பிள்ளை, போத்து, குழவி, கால். (௫)

௨௭௯௩. மரவுரியின்பெயர்—மரத்தோல், வற்கலை, சீரை. (௩)

௨௭௯௪. மற்றுமரவுரியின்பெயர்—இறைஞ்சி. ஆ (௪)

௨௭௯௫. மரக்கொம்பின் பெயர்—கோடு, விடபம், கோடரம், பொங்கர், சாகை, கவடு, உலவை, தாரு, சினை, பணை, கொம்பர், கவலை. (௧௨)

௨௭௯௬. சேகின்பெயர்—சம்பம், ஆசினி, காழ், காழ்ப்பு, சாரம், வயிரம், கலை, அரி. (௮)

௨௭௯௭. தழையின்பெயர்—உலவை. (௧)

௨௭௯௮. கப்பின்பெயர்—கவை, கவா. (௨)

௨௭௯௯. இளங்கொம்பின்பெயர்—வளார், மெல்லியல். (௨)

௨௮00. தளிரின்பெயர்—வல்லரி, குழை, முறி, மஞ்சரி, கிசலயம், பல்லவம், அலங்கல், கிளை. (௮)

௨௮0௧. தளிர்த்தலின்பெயர்—துளிர்தல், சிலிர்த்தல், குழைத்தல். (௩)

௨௮0௨. அடிவெண்குருத்தின்பெயர்—முருந்து. (௧)

௨௮0௩. மலர்க்கொத்தின்பெயர்—தொத்து, மஞ்சரி, துணர், இணர், தொடர்ச்சி. (௫)

௨௮0௪. இலையின்பெயர்—பலாசம், பன்னம், பத்திரம், தகடு, பாசடை, தண்ணடை, சாகை, தமாலம், ஓலை, தழை, பச்சிலை, உலவை, அடை. (௧௩)

௨௮0௫. மற்றுமிலையின்பெயர்—சதனம், சதம், பத்திரி, தலம். ஆ (௧௭)

௨௮0௬. பாலினுட்படுகுருத்தின்பெயர்—பயின். (௧)

௨௮0௭. மொட்டின்பெயர்—கலுவடம், நனை, முகை, கன்னிகை, அரும்பு, முகிளம், கலிகை, சாலகம், கோரகம், போகில், நகை, மொக்குள். (௧௨)

௨௮0௮. மலரின்பெயர்—தாமம், குசுமம், தார், அலர், வீ, போது, சுண்ணம், சுமனசம், பூ, சுமம், துணர், அலரி, ஆலம். (௧௩)

உஅ0க. மலர்ந்தாதின்பெயர்—கேசர மகரஞ் சிதரோ கொங்கு-கேசரந்துணரிணர் கிளர்மலர்த்தாதே. (கசு0)

உஅக0. தாதின்றாளின்பெயர்—மகரந்தஞ் சுண்ணந் தாதின் றாளே. ()

உஅகக. மற்றுந்தாதின்றாளின்பெயர்—பராக மென்றும் பகரப் பெறுமே.

உஅகஉ. மலர்த்தேனின்பெயர்—மகரந்தமலர்த்தேன். (கசுரு)

உஅகங. பூவிதழின்பெயர்—தாது மதழுந் தண்டுந்தோடு - மேடும் பூவிணிதழ்ப்பெய ரென்ப, (கசுச)

உஅகச. அகவிதழின்பெயர்—அல்லியகவிதழ். (கசுரு)

உஅகரு. புறவிதழின்பெயர்—புல்லிபுறவிதழ், (கசுசு)

உஅகசு. மரத்தின்குலையின்பெயர்—தாறும் படுவுஞ் சாறுங் குடும்புங் - கோடுங் கொத்துமரத்தின்குலையே. (கசுஎ)

உஅகஎ. முளையின்பெயர்—காலேயங்குர முளையெனலாகும். (கசுஅ)

உஅகஅ. வேரின்பெயர்—தூருஞ் சடையுஞ் சிவையும்வேரே. (கசுகூ)

உஅககூ. கிழங்கின்பெயர்—மூல மூலகங் கந்தங் கிழங்கே. (கஎ0)

உஅஉ0. மற்றுங்கிழங்கின்பெயர்—சகுன மெனவுஞ் சாற்றப் பெறுமே.

உஅஉக. சிற்றரும்பின்பெயர்—முகைமுகிழ் மொக்குண் முகிளஞ் சிற்றரும்பே. (கஎஉ)

உஅஉஉ. உலர்ந்தபூவின்பெயர்—உணங்கல் சாம்பல் வாடலுலர்ந்த பூ.

உஅஉங. மலர்ச்சியின்பெயர்—அலர்த லவிழ்தல் விள்ள னகுதன் - மலர்தல் விரிதன் மலர்ச்சிப்பெயரே. (கஎச)

உஅஉச. விரிமலரின்பெயர்—இகமலர் வெதிர்தொடர்ப்பூவிரிமலரே. ()

உஅஉரு. பழம்பூவின்பெயர்—செம்மல் சாம்பறேம்பலும் பழம்பூ. (கஎசு)

உஅஉசு. விதையின்பெயர்—வீசம்பரலே விச்சுவிளைவிதை, (கஎஎ)

உஅஉஎ. மற்றும்விதையின்பெயர்—காழுங் கொட்டையு மாகு மென்ப.

உஅஉஅ. பிஞ்சின்பெயர்—வடுவெவுலுப்பிஞ்சு. (கஎகூ)

உஅஉகூ. பசுங்காயின்பெயர்—நிவிளிபசுங்காய். (கஅ0)

உஅங0. பழத்தின்பெயர்...பலமுங் கனியும் பழமென்றுகும் (கஅக)

உஅஙக. கனித்தோலின்பெயர்—கனித்தோல்செகிளுங் காழு மாகும்.

உஅஙஉ. காய்மரத்தின்பெயர்—பலினங்காய்மரம். (கஅங)

உஅஙங. காயாதமரத்தின்பெயர்—அவகேசியலாமரம். (கஅச)

உஅஙச. தழைமரத்தின்பெயர்—மலினந்தழைமரம். (கஅரு)

உஅஙரு. உலர்மரத்தின்பெயர்—வானமுலர்மரம். (கஅசு)

உஅஙசு. ஆண்மரத்தின்பெயர்—அகக்காழ் வன்மர மாண்மர மாகும். ()

உஅஙஎ. பெண்மரத்தின்பெயர்—புறக்காழ் புன்மரம் பெண்மர மென்ப.

௨௮௦௯. மலர்த்தாதின்பெயர்—கோசரம், மகரம், சிதர், கொங்கு, கேசரம், துணர், இணர், கிளர். (௮)

௨௮௧௦. தாதின்றாளின்பெயர்—மகரந்தம், சுண்ணம். (௨)

௨௮௧௧. மற்றுந்தாதின்றாளின்பெயர்—பராகம். (௧)

௨௮௧௨. மலர்த்தேனின்பெயர்—மகரந்தம். (௧)

௨௮௧௩. பூவிதழின்பெயர்—தாது, அதழ், தண்டு, தோடு, ஏடு. (௫)

௨௮௧௪. அகவிதழின்பெயர்—அல்லி. (௧)

௨௮௧௫. புறவிதழின்பெயர்—புல்லி. (௧)

௨௮௧௬. மரத்தின்குலையின்பெயர்—தாறு, படு, சாறு, குடும்பு, கோடு, கொத்து. (௬)

௨௮௧௭. முளையின்பெயர்—கால், அங்குரம். (௨)

௨௮௧௮. வேரின்பெயர்—தூர், சடை, சிவை. (௩)

௨௮௧௯. கிழங்கின்பெயர்—மூலம், மூலகம், கந்தம். (௩)

௨௮௨௦. மற்றுங்கிழங்கின்பெயர்—சகுனம். (௧)

௨௮௨௧. சிற்றரும்பின்பெயர்—முகை, முகிழ், மொக்குள், முகிளம். (௪)

௨௮௨௨. உலர்ந்தபூவின்பெயர்—உணங்கல், சாம்பல், வாடல். (௩)

௨௮௨௩. மலர்ச்சியின்பெயர்—அலர்தல், அவிழ்தல், விள்ளல், நகுதல், மலர்தல், விரிதல். (௬)

௨௮௨௪. விரிமலரின்பெயர்—இகமலர், வெதிர், தொடர்ப்பூ. (௩)

௨௮௨௫. பழம்பூவின்பெயர்—செம்மல், சாம்பல், தேம்பல். (௩)

௨௮௨௬. விதையின்பெயர்—வீசம், பரல், விச்சு, விரை. (௪)

௨௮௨௭. மற்றும்விதையின்பெயர்—காழ், கொட்டை. (௨)

௨௮௨௮. பிஞ்சின்பெயர்—வடு, எது. (௨)

௨௮௨௯. பசுங்காயின்பெயர்—நீவிளி. (௧)

௨௮௩௦. பழத்தின்பெயர்—பலம், கனி. (௨)

௨௮௩௧. கனித்தோலின்பெயர்—செகிள், காழ். (௨)

௨௮௩௨. காய்மரத்தின்பெயர்—பலினம். (௧)

௨௮௩௩. காயாதமரத்தின்பெயர்—அவகேசி (௧)

௨௮௩௪. தழைமரத்தின்பெயர்—மலினம். (௧)

௨௮௩௫. உலர்மரத்தின்பெயர்—வானம். (௧)

௨௮௩௬. ஆண்மரத்தின்பெயர்—அகக்காழ், வன்மரம். (௨)

௨௮௩௭. பெண்மரத்தின்பெயர்—புறக்காழ், புன்மரம். (௨)

உ௮௩௮. அலிமரத்தின்பெயர்—இருதிறத் தலாதன மரமலி வெளிறே.

உ௮௩௯. இலைக்கறியின்பெயர்—அடைசாகம் பன்னமடகு மிலைக்கறி.

உ௮௪௦. சோலையின்பெயர்—அரிநந் தனவனந் தண்டலை பொழிலே-யாராமந் துடவை தோட்டமுய் யான- மூபவன முத்தியானஞ் செய்கான்மர ச்செறிவு - சோலை யிளமரக் காவெனச் சொல்லும். (௧௯௧)

உ௮௪௧. ஊரொடுசேர்ந்த சோலையின்பெயர்—ஊரொடு சேர்ந்த சோலை வன மென்ப. (௧௯௨)

உ௮௪௨. மலையொடு சேர்ந்த சோலையின்பெயர்—மலையொடு சேர்ந்த சோலையா ராமம். (௧௯௩)

உ௮௪௩. கழிக்கரைச்சோலையின்பெயர்—கான லென்பது கழிக்கரைச் சோலை. (௧௯௪)

உ௮௪௪. செய்குன்று சேர்ந்தசோலையின்பெயர்—செய்குன்று சேர்ந்த சோலைதோப் பாகும். (௧௯௫)

உ௮௪௫. வயல்சூழ் சோலையின்பெயர்—வயல்சூழ்சோலை யிளமரக் காவே. (௧௯௬)

உ௮௪௬. சிறுதூற்றின்பெயர்—அரிலு மறலும் பதுக்கையுஞ் சிறுதூறு.

உ௮௪௭. குறுங்காட்டின் பெயர்—குறுங்காட்டின் பெய ரிறும்பென மொழிப. (௧௯௮)

உ௮௪௮. பெருங்காட்டின்பெயர்—பெருங்காடு வல்லை யெனப்பெயர் பெறுமே. (௧௯௯)

உ௮௪௯. காவற்காட்டின்பெயர்—கணைய மிளையரண் காவற் காடே. ()

உ௮௫௦. முதுகாட்டின்பெயர்—முதையே யிலை யுதிர் வுமுதுகாடெ ன்ப. (உ௦௧)

உ௮௫௧. கரிகாட்டின்பெயர்—பொச்சையுஞ் சுரமும் பொதிகரி காடே.

உ௮௫௨. வேலியின்பெயர்—அடைப்புங் காப்பும் வேலியாகும். (உ௦௩)

உ௮௫௩. மரப்பொந்தின்பெயர்—பொக்குப் பொத்துப்பொய் பொதும்பு பொள்ளல் - பொந்தாமரமெனப் புகன்றனர் புலவர். (உ௦௪)

உ௮௫௪. முள்ளின்பெயர்—கண்டகமுள்ளே கடுவுமாகும். (உ௦௫)

உ௮௫௫. தூற்றின்பெயர்—இறும்பே மிடைதூ றெனவிளம் பினரே.

உ௮௫௬. மரச்செறிவின்பெயர்—பொதும்பர் கோடர மூலவைமரச்செ றிவே. (உ௦௭)

உ௮௫௭. விறகின்பெயர்—முளரி கறலே முருடுகோழ் காட்ட - ஞெகிழி யிந்தனஞ் சமிதைநீள் விறகே. (உ௦௮)

உ௮௫௮. முட்செடிப்பொதுவின்பெயர்—முளரி முண்டக முட்செடிப் பொதுவே. (உ௦௯)

உ௮௩௮. அலிமரத்தின்பெயர்—வெளிறு. (௧)

உ௮௩௯. இலைக்கறியின்பெயர்—அடை, சாகம், பன்னம், அடகு. (௪)

உ௮௪0. சோலையின்பெயர்—அரி, நந்தனவனம், தண்டலை, பொழில், ஆராமம். துடவை, தோட்டம், உய்யானம், உபவனம், உத்தியானம், செய்கால், மரச்செறிவு, இளமரக்கா. (௧௩)

உ௮௪௧. ஊரோடுசேர்ந்த சோலையின்பெயர்—வனம். (௧)

உ௮௪௨. மலையொடு சேர்ந்த சோலையின்பெயர்—ஆராமம் (௧)

உ௮௪௩. கழிக்கரைச்சோலையின்பெயர்—கானல். (௧)

உ௮௪௪. செய்குன்றுசேர்ந்த சோலையின்பெயர்—தோப்பு. (௧)

உ௮௪௫. வயல்சூழ் சோலையின்பெயர்—இளமரக்கா. (௧)

உ௮௪௬. சிறுதூற்றின்பெயர்—அரில், அறல், பதுக்கை. (௩)

உ௮௪௭. குறுங்காட்டின்பெயர்—இறும்பு. (௧)

உ௮௪௮. பெருங்காட்டின்பெயர்—வல்லை. (௧)

உ௮௪௯. காவற்காட்டின்பெயர்—கணையம், இளை, அரண். (௩)

உ௮௫0. முதுகாட்டின்பெயர்—முதை, இலையுதிர்வு. (௨)

உ௮௫௧. கரிகாட்டின்பெயர்—பொச்சை, சுரம், பொதி. (௩)

உ௮௫௨, வேலியின்பெயர்—அடைப்பு, காப்பு. (௨)

உ௮௫௩. மரப்பொந்தின்பெயர்—பொக்கு, பொத்து, பொய், பொதும்பு பொள்ளல். (௫)

உ௮௫௪. முள்ளின்பெயர்—கண்டகம், கடு. (௨)

உ௮௫௫. தூற்றின்பெயர்—இறும்பு, மிடை. (௨)

உ௮௫௬. மரச்செறிவின்பெயர்—பொதும்பர், கோடரம், உலவை. (௩)

உ௮௫௭. விறகின்பெயர்—முளரி, கறல், முருடு, காழ், காட்டம், ஞெகிழி, இந்தனம், சமிதை. (௮)

உ௮௫௮. முட்செடிப்பொதுவின்பெயர்—முளரி, முண்டகம. (௨)

உ௮௫௯. விரிதூற்றின்பெயர்—அதிரல் விரிதூறு. (௨௧0)

உ௮௬0. சுண்டியின்பெயர்—சுச்சுச்சுண்டி. (௨௧௧)

உ௮௬௧. வறட்சுண்டியின்பெயர்—சுமங்கை வறட்சுண்டி. (௨௧௨)

உ௮௬௨. ஆவிரையின்பெயர்—பகரியாவிரை. (௨௧௩)

உ௮௬௩. வஞ்சியின்பெயர்—வானீரம் வஞ்சுளம் வஞ்சியாகும். (௨௧௪)

உ௮௬௪. துத்தியின்பெயர்—கோளியந்துத்தி. (௨௧௫)

உ௮௬௫. ஆடாதோடையின்பெயர்—ஆடா தோடை வாசை யாகும். ()

உ௮௬௬. சித்திரமூலத்தின்பெயர்—சித்திர மூலங் கொடிவேலி யாகும்.

உ௮௬௭. தும்பையின்பெயர்—துரோணந்தும்பை. (௨௧௮)

உ௮௬௮. ஆதொண்டையின்பெயர்—தொண்டையாதொண்டை. (௨௧௯)

உ௮௬௯. மரலின்பெயர்—அரலை மரலாம். (௨௨0)

உ௮௭0. கற்றாழையின்பெயர்—குமரிகற்றாழை. (௨௨௧)

உ௮௭௧. நாயுருவியின்பெயர்—கரமஞ் சரிநா யுருவியாகும். (௨௨௨)

உ௮௭௨. கொழிஞ்சியின்பெயர்—கொழிஞ்சியின்பெயர்கோளியென்றாகும்

உ௮௭௩. ஊமத்தையின்பெயர்—உன்மத்த மூமத்தை. (௨௨௪)

உ௮௭௪. கஞ்சாவின்பெயர்—சஞ்சங் குல்லை கஞ்சாவாகும். (௨௨௫)

உ௮௭௫. பொன்னூமத்தையின்பெயர் — மதமத்தை பொன் னூமத்தை யாகும். (௨௨௬)

உ௮௭௬. நீலியின்பெயர்—அவுரி பத்திய நீலி யாகும். (௨௨௭)

உ௮௭௭. துழாயின்பெயர்—குல்லைமுடி துளவம் வனமுந் துழாயெனல்.

உ௮௭௮. மற்றுந்துழாயின்பெயர்—பிருந்தமு மப்பெயர் பேசப் பெறுமே. (௨௨௯)

உ௮௭௯. தூதுளையின்பெயர்—தூதுளந்தூதுளை. (௨௩0)

உ௮௮0. வீழியின்பெயர்—விழிமிவீழி. (௨௩௧)

உ௮௮௧. காஞ்சொறியின்பெயர்—சண்டேதிகாஞ்சொறி. (௨௩௨)

உ௮௮௨. கிலுகிலுப்பையின்பெயர்—பகன்றைகிலுகிலுப்பை. (௨௩௩)

உ௮௮௩. தண்ணீர்க்குடத்தின்பெயர்—கான வாழை தண்ணீர்க்குடமே.

உ௮௮௪. பிரம்பின்பெயர்—சாதி வேத்திரஞ் சூரல் பிரம்பே. (௨௩௫)

உ௮௮௫. கழற்கொடியின்பெயர்—கழங்கு முழல் கர்ச்சூரங் கொடிக்கழல்

உ௮௮௬. கழற்காயின்பெயர்—கழற்காய் முழலுங் கழங்கு மாகும். (௨௩௭)

உ௮௮௭ இண்டின்பெயர்—இண்டை புலிதொடக்கி யீகை யீங்கை யிண்டென மொழிப வியல் வல்லோரே. (௨௩௮)

உ௮௮௮. சூரியின்பெயர்—விந்தஞ்சூரி (௨௩௯)

உ௮௯௯. புனற்றுளசியின்பெயர்—குல்லைபுனற்றுளசி. (௨௪0)

உ௮௫௯. விரிதூற்றின்பெயர்—அதிரல். (௧)
உ௮௬0. சுண்டியின்பெயர்—சுச்சு (௧)
உ௮௬௧. வறட்சுண்டியின்பெயர்—சுமங்கை. (௧)
உ௮௬௨. ஆவிரையின் பெயர்—பகரி. (௧)
உ௮௬௩. வஞ்சியின்பெயர்—வானீரம், வஞ்சுளம். (௨)
உ௮௬௪. துத்தியின்பெயர்—கோளியம். (௧)
உ௮௬௫. ஆடாதோடையின்பெயர்—வாசை. (௧)
௨௮௬௬. சித்திரமூலத்தின்பெயர்—கொடிவேலி. (௧)
உ௮௬௭. தும்பையின்பெயர்—துரோணம். (௧)
உ௮௬௮. ஆதொண்டையின்பெயர்—தொண்டை. (௧)
உ௮௬௯. மரலின்பெயர்—அரலை. (௧)
உ௮௭0. கற்றாழையின்பெயர்—குமரி. (௧)
உ௮௭௧. நாயுருவியின்பெயர்—கரமஞ்சரி (௧)
உ௮௭௨. கொழிஞ்சியின்பெயர்—கோளி. (௧)
உ௮௭௩. ஊமத்தையின்பெயர்—உன்மத்தம். (௧)
உ௮௭௪. கஞ்சாவின்பெயர்—கஞ்சம், குல்லை, (௨)
உ௮௭௫. பொன்னூமத்தையின்பெயர்—மதமத்தை. (௧)

உ௮௭௬. நீலியின்பெயர்—அவுரி, பத்தியம். (௨)
உ௮௭௭. துழாயின்பெயர்—குல்லை, முடி, துளவம், வனம். (௪)
உ௮௭௮. மற்றுந்துழாயின்பெயர்—பிருந்தம். ஆ (௫)

உ௮௭௯. தூதுளையின்பெயர்—தூதுளம். (௧)
உ௮௮0. வீழியின்பெயர்—விழிமி. (௧)
உ௮௮௧. காஞ்சொறியின்பெயர்—கஞ்டூகி. (௧)
உ௮௮௨. கிலுகிலுப்பையின்பெயர்—பகன்றை. (௧)
உ௮௮௩. தண்ணீர்க்குடத்தின்பெயர்—கானவாழை. (௧)
உ௮௮௪. பிரம்பின்பெயர்—சாதி, வேத்திரம், சூரல். (௩)
உ௮௮௫. கழற்கொடியின்பெயர்—கழங்கு, முழல், கர்ச்சூரம். (௩)
உ௮௮௬. கழற்காயின்பெயர்—முழல், கழங்கு. (௨)
உ௮௮௭. இண்டின்பெயர்—இண்டை, புலிதொடக்கி, ஈகை, ஈங்கை (௪)
உ௮௮௮. சூரியின்பெயர்—விந்தம். (௧)
உ௮௮௯. புனற்றுளசியின்பெயர்—குல்லை. (௧)

உ௮௯0. சிறுபூளையின்பெயர்—உழிஞைசிறுபூளை. (உ௪௧)

உ௮௯௧. பாற்சொற்றிச்செடியின்பெயர்—பாற்சொற்றிபாயசம். (உ௪உ)

உ௮௯உ. செங்காந்தளின்பெயர்.—தோன்றி பற்றையிலாங்கலி செங்காந்தள். (உ௪௩)

உ௮௯௩. வெண்காந்தளின்பெயர்—கோடல் ரேன்றி கோடை வெண்காந்தள். (உ௪௪)

உ௮௯௪. வெண்கிடையின்பெயர்—கோடல் வெண் கிடை பூசைவெருகாகும். (உ௪௫)

உ௮௯௫. காக்கணத்தின்பெயர்—கிகிணி கன்னி காக்கணங் கருவிளை.

௮௮௯௬. வெண்காவிளையின்பெயர்—உயவை வெண்காவிளை. (உ௪௭)

உ௮௯௭. தாளியின்பெயர்—மஞ்சிகந்தாளி. (உ௪௮)

உ௮௯௮. சிவேதையின்பெயர்—சிவேதை பகன்றை. (உ௪௯)

உ௮௯௯. குன்றியின்பெயர்—குஞ்சங்குன்றி. (உ௫0)

உ௯00. கொத்தான்பெயர்—நந்தைகொத்தான். (உ௫௧)

உ௯0௧. சத்திக்கொடியின்பெயர்—தாடி மஞ்சஞ் சத்திக் கொடியே.()

உ௯0உ. சாறணையின்பெயர்—திரிபுரி சாறடை சாறணையாகும். (உ௫௩)

உ௯0௩. சீந்திற்கொடியின்பெயர்—அமுதவல்லி சீந்தில் சீவந்தி யாகும்()

உ௯0௪. பாலையின்பெயர்—பாலை சீவந்தி சீவனி யாகும். (உ௫௫)

உ௯0௫. கூதாளியின்பெயர்—துடிகூ தாளங் கூதாளி யென்ப. (உ௫௬)

உ௯0௬. கோவையின்பெயர்—விம்பமுந் தொண்டையுங் கொவ்வையுங்கோவை. (உ௫௭)

உ௯0௭. சிலந்திக்கொடியின்பெயர்—தலைச்சுருள்வள்ளி சிலந்திக்கொடியே. (உ௫௮)

உ௯0௮. வள்ளிக்கொடியின்பெயர்—வள்ளியிலதை வள்ளிக்கொடியே.()

உ௯0௯. பிரண்டையின்பெயர்—வச்சிர வல்லி பிரண்டையாகும். (உ௬0)

உ௯௧0. இசங்கின்பெயர்—இசங்கு குண்டலி முத்தா பலமே. (உ௬௧)

உ௯௧௧. கக்கரியின்பெயர்—கக்கரிவாலுங்கி. (உ௬உ)

உ௯௧உ. செங்கிடையின்பெயர்—கந்தூரிசெங்கிடை. (உ௬௩)

உ௯௧௩. மற்றுஞ்செங்கிடையின்பெயர்—முதலையு மதன்பால் மொழியப்பெறுமே. (உ௬௪)

உ௯௧௪. முந்திரிகையின்பெயர்—மதுரசங்கோத்தனி முந்திரிகையாகும்.

உ௯௧௫. முள்ளுடைமூலமெல்லாவற்றிற்கும்பெயர்—முண்டக முள்ளுடை மூலமென்ப.

உ௮௬0. சிறுபூளையின்பெயர்—உழிஞை. (௧)

உ௮௬௧. பாற்சொற்றிச்செடியின்பெயர்—பாயசம். (௧)

உ௮௬௨. செங்காந்தளின்பெயர்—தோன்றி, பற்றை, இலாங்கலி. (௩)

உ௮௬௩. வெண்காந்தளின்பெயர்—கோடல், தோன்றி, கோடை. (௩)

உ௮௬௪. வெண்கிடையின்பெயர்—கோடல், பூசை, வெருகு. (௨)

உ௮௬௫. காக்கணத்தின்பெயர்—கிகிணி, கன்னி, கருவிளை. (௩)

உ௮௬௬. வெண்காவிளையின்பெயர்—உயவை. (௧)

உ௮௬௭. தாளியின்பெயர்—மஞ்சிகம். (௧)

உ௮௬௮ சிவேதையின்பெயர்—பகன்றை. (௧)

உ௮௬௯. குன்றியின்பெயர்—குஞ்சம். (௧)

உ௯00. கொத்தான்பெயர்—நந்தை. (௧)

உ௯0௧. சந்திக்கொடியின்பெயர்—தாடிமஞ்சம். (௧)

உ௯0௨. சாறணையின்பெயர்—திரிபுரி, சாறடை. (௨)

உ௯0௩. சீந்திற்கொடியின்பெயர்—அமுதவல்லி, சீவந்தி. (௨)

உ௯0௪. பாலையின்பெயர்—சீவந்தி, சீவனி. (௨)

உ௯0௫. கூதாளியின்பெயர்—துடி, கூதாளம். (௨)

உ௯0௬. கோவையின்பெயர்—விம்பம், தொண்டை, கொவ்வை. (௩)

உ௯0௭. சிலந்திக்கொடியின்பெயர்—தலைச்சுருள்வள்ளி. (௧)

உ௯0௮. வள்ளிக்கொடியின்பெயர்—வள்ளி, இலதை. (௨)

உ௯0௯. பிரண்டையின்பெயர்—வச்சிரவல்லி. (௧)

உ௯௧0. இசங்கின்பெயர்—குண்டலி, முத்தாபலம். (௨)

உ௯௧௧. கக்கரியின்பெயர்—வாலுங்கி. (௧)

உ௯௧௨. செங்கிடையின்பெயர்—சந்நூரி. (௧)

உ௯௧௩. மற்றுஞ்செங்கிடையின்பெயர்—முதலை. (௧)

உ௯௧௪. முந்திரிகையின்பெயர்—மதுரசம், கோத்தனி. (௨)

உ௯௧௫. முள்ளுடைமூலமெல்லாவற்றிற்கும்பெயர்—முண்டகம். (௧)

உகூகசா. இஞ்சியின்பெயர்—நல்ல மல்ல நறுமருப்பிஞ்சி. (உசுஎ)

உகூகஎ. வழுதலையின்பெயர்—வழுதுணைவங்கம் பிருகதிவழுதலை. ()

உகூகஅ. கையாந்தகரையின்பெயர்—கோகண மறுபதங் கையாந்தகரை.

உகூகக. பொன்னாங்காணியின்பெயர்—சீதை பொன்னாங்காணியாகும்.

உகூஉ௦. சிறுகீரையின்பெயர்—சில்லிசாகினி மேகநாதஞ்சிறு கீரை. ()

உகூஉக. சேம்பின்பெயர்—சாகினி சேம்பு சகுடமாகும். (உஎஉ)

உகூஉஉ. வள்ளையின்பெயர்—நாளிகம்வள்ளை. (உஎங)

உகூஉங. பசிரியின்பெயர்—பசிரிபாவிரி. (உஎச)

உகூஉச. வெள்ளரியின்பெயர்—உருவாரம்வெள்ளரி. (உஎரு)

உகூஉரு. சிறுகிழங்கின்பெயர்—சுரசஞ்சிறுகிழங்கு. (உஎசு)

உகூஉசு. கருணைக்கிழங்கின்பெயர்—கந்தஞ் சூரணங் கருணைப்பெயரே.

உகூஉஎ. பாகலின்பெயர்—கார வல்லி கூலம் பாகல். (உஎஅ)

உகூஉஅ. பீர்க்கின்பெயர்—பீரம்பீர்க்கு. (உஎக)

உகூஉக. பெரும்பீர்க்கின்பெயர்—படலிகைபெரும்பீர்க்கு. (உஅ௦)

உகூங௦. கொடிக்கொத்தான்பெயர்—தூழில் கொடிக்கொத்தான். (உஅக)

உகூஙக. சுரையின்பெயர்—தும்பியுமலாபமுஞ் சுரையாகும்மே. (உஅஉ)

உகூஙஉ. பேய்ச்சுரையின்பெயர்—புற்கொடிபேய்ச்சுரை. (உஅங)

உகூஙங. கொடியின்வகைப்பெயர்—கோற்கொடி மென்கொடிகொடியென்றாகும். (உஅச)

உகூஙச. கொடியின்பெயர்—இலதை வல்லி தூழில் கொடிப்பெயர்.

உகூஙரு. வெற்றிலையின்பெயர்—நாகவல்லி மெல்லிலை தாம்பூல மூலவல்லியிலைக்கொடிவெற்றிலை. (உஅசு)

உகூஙசு. மிளகின்பெயர்—கறியு மரீசியுங் காயமுங் கலினையுங் - கோளகமுந் திரங்கலு மிரியலுமிளகே. (உஅஎ)

உகூஙஎ. ஏலத்தின்பெயர்—இலாஞ்சி துடியே யேல மாகும். (உஅஅ)

உகூஙஅ. மஞ்சளின்பெயர்—பீதங் காஞ்சனி நிசியரி சனமுட - னேநு மரித்திராபமு மஞ்சட்குறுபெயர். (உஅக)

உகூஙக. வெண்கடுகின்பெயர்—அந்தில் கடிப்பகை யையவி சித்தார்த்தம் - வெண்சிறு கடுகென விளம்பலாகும். (உக௦)

உகூச௦. திப்பிலியின்பெயர்—பிப்பிலி காமன் சிறுமூலகமே - மாகதி கலினி திப்பிலி யாகும். (உகக)

உகூசக. கொத்துமலியின்பெயர்—உருளரிசி கொத்துமலியென் றுரைப்பர். (உகஉ)

௨௬௧௬. இஞ்சியின்பெயர்—நல்லம், அல்லம், நறுமருப்பு. (௩)

௨௬௧௭. வழுதலையின்பெயர்—வழுதுணை, வங்கம், பிருகதி. (௩)

௨௬௧௮. கையாந்தகரையின்பெயர்—கோகனம், அறுபதம். (௨)

௨௬௧௯. பொன்னாங்காணியின்பெயர்—சீதை. (௧)

௨௬௨0. சிறுகீரையின்பெயர்—சில்லி, சாகினி, மேகநாதம். (௩)

௨௬௨௧. சேம்பின்பெயர்—சாகினி, சகுடம். (௨)

௨௬௨௨. வள்ளையின்பெயர்—நாளிகம். (௧)

௨௬௨௩. பசிரியின்பெயர்—பாவிரி. (௧)

௨௬௨௪. வெள்ளரியின்பெயர்—உருவாரம் (௧)

௨௬௨௫. சிறுகிழங்கின்பெயர்—சுரசம். (௧)

௨௬௨௬. கருணைக்கிழங்கின்பெயர்—கந்தம், சூரணம். (௨)

௨௬௨௭. பாகலின்பெயர்—காரவல்லி, கூலம். (௨)

௨௬௨௮. பீர்க்கின்பெயர்—பீரம். (௧)

௨௬௨௯. பெரும்பீர்க்கின்பெயர்—படலிகை. (௧)

௨௬௩0. கொடிக்கொத்தான்பெயர்—நூழில். (௧)

௨௬௩௧. சுரையின்பெயர்—தும்பி, அலாபு. (௨)

௨௬௩௨. பேய்ச்சுரையின்பெயர்—புற்கொடி. (௧)

௨௬௩௩. கொடியின்வகைப்பெயர்—கோற்கொடி, மென்கொடி. (௨)

௨௬௩௪. கொடியின்பெயர்—இலதை, வல்லி, நூழில். (௩)

௨௬௩௫. வெற்றிலையின்பெயர்—நாகவல்லி, மெல்லிலை, தாம்பூலம், மூலவல்லி, இலைக்கொடி. (௫)

௨௬௩௬. மிளகின்பெயர்—கறி, மரிசி, காயம், கலினை, கோளகம், திரங்கல், மிரியல். (௭)

௨௬௩௭. ஏலத்தின்பெயர்—இலாஞ்சி, துடி. (௨)

௨௬௩௮. மஞ்சளின்பெயர்—பீதம், காஞ்சனி, நிசி, அரிசனம், அரித்திராபம். (௫)

௨௬௩௯. வெண்கடுகின்பெயர்—அந்தில், கடிப்பகை, ஐயவி, சித்தார்த்தம். (௪)

௨௬௪0. திப்பிலியின்பெயர்—பிப்பிலி, காமன், சிறுமூலகம், மாகதி, கலினி. (௫)

௨௬௪௧. கொத்துமலியின்பெயர்—உருளரிசி. (௧)

௨௯௪௨. வெண்காயத்தின்பெயர்—காய முளரி வெண்காய மாகும். ()

௨௯௪௩. வாசந்தருபலபண்டத்தின்பெயர்—தகரந்தக்கோலங்கோட்டஞ் சாதிக்கா, யிலவங்க மேலங் கச்சோல மாஞ்சி, பகரும்வா சந்தரும் பண்டப் பெயரே. (௨௯௪)

௨௯௪௪. மல்லிகையின்பெயர்—மாலதி யநங்கம் பூருண்டி மல்லிகை.

௨௯௪௫. வனமல்லிகையின்பெயர்—மௌவ லென்பது வனமல் லிகையே. (௨௯௬)

௨௯௪௬. இருவாட்சியின்பெயர்—மயிலை யநங்க மிருவாட்சி. (௨௯௭)

௨௯௪௭. சாதிப்பூவின்பெயர்—கருமுகை பித்திகை சாதியாகும். (௨௯௮)

௨௯௪௮. முல்லையின்பெயர்—தளவமுல்லை சாதி பிச்சி. (௨௯௯)

௨௯௪௯. ஊசிமுல்லையின்பெயர்—தளவுமாகதிநை திகை யூசிமுல்லை. () (௩00]

௨௯௫0. கொடிமல்லிகையின்பெயர்—விசலிகை யென்ப கொடிமல் லிகையே. (௩0௧)

௨௯௫௧. நந்தியாவர்த்தத்தின்பெயர்—வலம்புரி நந்தியா வர்த்தமாகும்.

௨௯௫௨. மருக்கொழுந்தின்பெயர்—தமனக மருக்கொழுந்து. (௩0௩)

௨௯௫௩. மலைப்பச்சையின்பெயர்—குளவிமலைப்பச்சை. (௩0௪)

௨௯௫௪. அடம்பின்பெயர்—அடம்புபாலிகை. (௩0௫)

௨௯௫௫. வெட்டுவேரின்பெயர்—முடிவாழைவெட்டுவேர். (௩0௬)

௨௯௫௬. துவரையின்பெயர்—ஆடகிதுவரை. (௩0௭)

௨௯௫௭. அவரையின்பெயர்—அவரைசிக்கடி. (௩0௮)

௨௯௫௮. உழுந்தின்பெயர்—மாடமுழுந்து. (௩0௯)

௨௯௫௯. கடலையின்பெயர்—மஞ்சூரங்கடலை. (௩௧0)

௨௯௬0. காராமணியின்பெயர்—காரா மணியிதை கூலமு மாகும். (௩௧௧)

௨௯௬௧. பசும்பயற்றின்பெயர்—பாசி முற்கம் பசும்பய றாகும். (௩௧௨)

௨௯௬௨. கொள்ளின்பெயர்—காணங் குலுத்தங் கொள்ளெனக் கருதுவர். (௩௧௩)

௨௯௬௩. துவரைஅவரைமுதலியவற்றின்பெயர்— இனையவை முதிரை யென்னவு மாகும். (௩௧௪)

௨௯௬௪. சோளத்தின்பெயர்—சொன்னலு மிறுங்குஞ் சோளமாகும். ()

௨௯௬௫. வரகின்பெயர்—மருவுகோத்திரவம் வரகெனலாகும், (௩௧௬)

௨௯௬௬. கருந்தினையின்பெயர்—இறடியுங் கங்குங் கருந்தினையென்ப.()

௨௯௬௭. செந்தினையின்பெயர்—கம்புங்கவலையுஞ்செந்தினை யென்ப ()

௨௯௬௮. பைந்தினையின்பெயர்—ஏனல்குரலுவணை பைந்தினை யென்ப.()

௨௬௪௨. வெண்காயத்தின்பெயர்—காயம், உள்ளி. (௨)

௨௬௪௩. வாசந்தருபலபண்டத்தின்பெயர்—தகரம், தக்கோலம், கோட்டம், சாதிக்காய், இலவங்கம், எலம், கச்சோலம், மாஞ்சி. (அ)

௨௬௪௪. மல்லிகையின்பெயர்—மாலதி, அநங்கம், பூருண்டி. (௩)

௨௬௪௫. வனமல்லிகையின்பெயர் மௌவல். (௧)

௨௬௪௬. இருவாட்சியின்பெயர்—மயிலை, அநங்கம். (௨)

௨௬௪௭. சாதிப்பூவின்பெயர்—கருமுகை, பித்திகை, (௨)

௨௬௪௮. முல்லையின்பெயர்—தளவம், சாதி, பிச்சி. (௩)

௨௬௪௯. ஊசிமுல்லையின்பெயர்—தளவு, மாகதி, நைதிகை. (௩)

௨௬௫0. கொடிமல்லிகையின்பெயர்—விசலிகை. (௧)

௨௬௫௧. நந்தியாவர்த்தத்தின்பெயர்—வலம்புரி. (௧)

௨௬௫௨. மருக்கொழுந்தின்பெயர்—தமனகம். (௧)

௨௬௫௩. மலைப்பச்சையின்பெயர்—குளவி. (௧)

௨௬௫௪. அடம்பின்பெயர்—பாலிகை. (௧)

௨௬௫௫. வெட்டிவேரின்பெயர்—முடிவாழை. (௧)

௨௬௫௬. துவரையின்பெயர்—ஆடகி. (௧)

௨௬௫௭. அவரையின்பெயர்—சிக்கடி. (௧)

௨௬௫௮. உழுந்தின்பெயர்—மாடம். (௧)

௨௬௫௯. கடலையின்பெயர்—மஞ்சூரம். (௧)

௨௬௬0. காராமணியின்பெயர்—இதை, கூலம். (௧)

௨௬௬௧. பசும்பயற்றின்பெயர்—பாசி, முற்கம். (௧)

௨௬௬௨. கொள்ளின்பெயர்—காணம், குலுத்தம். (௨)

௨௬௬௩. துவரையவரையின்முதலியவற்றின்பெயர்—முதிரை. (௧)

௨௬௬௪. சோளத்தின்பெயர்—சொன்னல், இறுங்கு. (௨)

௨௬௬௫. வரகின்பெயர்—கோத்திரவம். (௧)

௨௬௬௬. கருந்தினையின்பெயர்—இறடி, கங்கு. (௨)

௨௬௬௭. செந்தினையின்பெயர்—கம்பு, கவலை. (௨)

௨௬௬௮. பைந்தினையின்பெயர்—ஏனல், குரல், நுவணை. (௩)

௨௬௬. தினைத்தாளின்பெயர்—அருவி தினைத்தாளிருவியு மாகும். ()

௨௬௭. எள்ளின்பெயர்—எண்ணுந் திலமு நூவுமெள்ளாகும். (௩௨௧)

௨௬௮. இளையெள்ளின்பெயர்—குமிகை யிளையெள். (௩௨௨)

௨௬௯. எள்ளிளங்காயின்பெயர்—கவ்வையெள்ளிளங்காயாகும்மே. ()

௨௭௩. நெல்லின்பெயர்—சொல்லும் விரீகியும் வரியுஞ் சாலியும்-யவமு நெல்லின்பொதுப்பெயராகும். (௩௨௪)

௨௭௪. குளநெல்லின்பெயர்—நீர்வாரங்குள நெல்லாகும்மே. (௩௨௫)

௨௭௫. மலைச்சாரல்விளைநெல்லின்பெயர்—ஐவன மலைச்சாரல்விளைநெல்லாகும். (௩௨௬)

௨௭௬. செஞ்சாலியின்பெயர்—செந்நெனன்னெல் செஞ்சாலிப் பெயர்.

௨௭௭. பயிரின்பெயர்—பயிரே பசும்புல் பைங்கூழாகும். (௩௨௮)

௨௭௮. பதரின்பெயர்—பதடிபதரே பொல்லு மாகும். (௩௨௯)

௨௭௯. இளஞ்சூலின்பெயர்—இளஞ்சூல்பீட்டை. (௩௩௦)

௨௮௰. இளங்கதிரின்பெயர்—பீளிளங்கதிரே. (௩௩௧)

௨௮௧. கதிரின்பெயர்—எனலுங் குரலுங் கொழுங்கதிரென்ப. (௩௩௨)

௨௮௨. கோதுமையின்பெயர்—கோதிகோதுமை. (௩௩௩)

௨௮௩. தோரைநெல்லின்பெயர்—இயவை தோரை. (௩௩௪)

௨௮௪. போரின்பெயர்—போர் சும்மை சூடும் போர்ப்பு மாகும். (௩௩௫)

௨௮௫. தூற்றுநெற்சூட்டின்பெயர்—பொலி பொங்கழி தூற்று நெற்சூடாகும். (௩௩௬)

௨௮௬. வைக்கோலின்பெயர்—வையே பலாலம் வழுது வைக்கோலே.

௨௮௭. நெல்லிஞற்றின்பெயர்—நாறுநெல்லி ஞற்றாகும்மே. (௩௩௮)

௨௮௮. விழலின்பெயர்—விழலே விரணம் விளம்புங்காலே. (௩௩௯)

௨௮௯. வேயரிசியின்பெயர்—வேரல்வேயரிசி தோரையுமாகும். (௩௪௦)

௨௯௰. தருப்பையின்பெயர்—குசை குமுதங் கூர்ச்சங்கு முதந்தருப்பை. (௩௪௧)

௨௯௧. நாணலின்பெயர்—கானசரமே காமவேழம்-நவையில்சரவண நாணற்பெயரே. (௩௪௨)

௨௯௨. மற்றுநாணலின்பெயர்—சிவேதை நாசை நாணலெனச்செப்புவர். (௩௪௩)

௨௯௩. கொறுக்கையின்பெயர்—எருவை வேழங் கொறுக்கை கொறுக்கச்சி. (௩௪௪)

௨௯௪. திரட்கோரையின்பெயர்—எருவைசாய் பஞ்சாய் திரட்கோரையென்ப. (௩௪௫)

உ௯௬௯. தினைத்தாளின்பெயர்—அருவி, இருவி. (உ)
உ௯௭0. எள்ளின்பெயர்—எண், திலம், நூவு. (௩)
உ௯௭௧. இளையெள்ளின்பெயர்—குமிகை. (௧)
உ௯௭உ. எள்ளிளங்காயின்பெயர்—கவ்வை. (௧)
உ௯௭௩. நெல்லின்பெயர்—சொல், விரீகி, வரி, சாலி, யவம். (௫)

உ௯௭௪. குளநெல்லின்பெயர்—நீர்வாரம். (௧)
உ௯௭௫. மலைச்சாரல்விளைநெல்லின்பெயர்—ஐவனம். (௧)

உ௯௭௬. செஞ்சாலியின்பெயர்—செந்நெல், நன்னெல். (உ)
உ௯௭௭. பயிரின்பெயர்—பசும்புல், பைங்கூழ். (உ)
உ௯௭அ. பதரின்பெயர்—பதடி, பொல், (உ)
உ௯௭௯. இளஞ்சூலின்பெயர்—பீட்டை. (௧)
உ௯அ0. இளங்கதிரின்பெயர்—பீள். (௧)
உ௯அ௧. கதிரின்பெயர்—எனல், குரல், (உ)
உ௯அஉ. கோதுமையின்பெயர்—கோதி. (௧)
உ௯அ௩. தோரைநெல்லின்பெயர்—இயவை. (௧)
உ௯அ௪. போரின்பெயர்—சும்மை, சூடு, போர்ப்பு. (௩)
உ௯அ௫. தூற்றுநெற்சூட்டின்பெயர்—பொலி, பொங்கழி. (உ)

உ௯அ௬. வைக்கோலின்பெயர்—வை, பலாலம், வழுது. (௩)
உ௯அ௭. நெல்லினாற்றின்பெயர்—நாறு. (௧)
உ௯அஅ. விழலின்பெயர்—விரணம். (௧)
உ௯அ௯. வேயரிசியின்பெயர்—வேரல், தோரை. (உ)
உ௯௯0. தருப்பையின்பெயர்—குசை, குமுதம், கூர்ச்சம், குசம். (௪)

உ௯௯௧. நாணலின்பெயர்—கானசரம், காமவேழம், சரவணம். (௩)

உ௯௯உ. மற்றுநாணலின்பெயர்—சிவேதை, காசை, (உ)

உ௯௯௩. கொறுக்கையின்பெயர்—எருவை, வேழம், கொறுக்கச்சி. (௩)

உ௯௯௪. திரட்கோரையின்பெயர்—எருவை, சாய், பஞ்சாய். (௩)

௨௯௯௫. வாட்கோரையின்பெயர்—செருந்தி வாட்கோரையென்னச் செப்புவர். (௩௯௬)

௨௯௯௬. பச்சறுகின்பெயர்—பதமுந் தூர்வையும் பச்சறுகாகும். (௩௯௭)

௨௯௯௭. பசும்புல்லின்பெயர்—சட்பம் பசும்புல். (௩௯௮)

௨௯௯௮. உலர்ந்தபுல்லின்பெயர்—திரணமுலர்ந்தபுல். (௩௯௯)

௨௯௯௯. புற்பிடியின்பெயர்—காசைபுற்பிடி. (௩௫0)

௩000. இளம்புல்லின்பெயர்—இளம்புல்பதமே. (௩௫௧)

௩00௧. ஒருவகைப்புல்லின்பெயர்—புதவொருவிகற்பப்புல்லாகும்மே. ()

௩00௨. நீர்முள்ளியின்பெயர்—நீர்முள்ளி முண்டகம். (௩௫௩)

௩00௩. நீர்க்குளிரியின்பெயர்—கல்லார நீர்க்குளிரி. (௩௫௪)

௩00௪. கத்தூரிமஞ்சளின்பெயர்—சுவாங்கிகத்தூரி. (௩௫௫)

௩00௫. கிடையின்பெயர்—சடையே கிடையெனல். (௩௫௬)

௩00௬. பாசியின்பெயர்—நாரஞ் செவிரஞ் சடைச்சி சைவலம்-பாசியென்பர் பதியமுமாகும். (௩௫௭)

௩00௭. தாமரையின்பெயர்—அம்புய மம்போ ருகமர விந்தம் - பங்கயம் புண்ட ரீகம் பதுமம்-முண்டக நளின முளரி சரோருகஞ்-சதபத்திரிகோ கனதஞ் சலசம்- வனசங் கமலம் வாரிசங் கஞ்சந்-திருமால் கொப்பூழ்திருமலரிண்டை-பங்கேருகந் தாமரைப்பெயராகும். (௩௫௮)

௩00௮. தாமரைமலரின்பெயர்—இறும்பிரா சீவநறுந்தண்பூவே. (௩௫௯)

௩00௯. தாமரைக்கொட்டையின்பெயர்—பூவினுட் கொட்டை பொகுட்டே கன்னிகை. (௩௬0)

௩0௧0. தாமரைச்சுருளின்பெயர்—விசியும் வளையமுஞ் சுருளெனப் பேசுவர். (௩௬௧)

௩0௧௧. தாமரைக்காயின்பெயர்—வராடகம் வராண்டம் வண்காயாகும். ()

௩0௧௨. செங்குவளையின்பெயர்—அரத்தமுற்பல மாஞ்செங்குவளை. ()

௩0௧௩. மற்றும்செங்குவளையின்பெயர்—எருமணங் கல்லாரஞ் செங்கழுநீருமாமே. (௩௬௪)

௩0௧௪. கருங்குவளையின்பெயர்—பானல் கருங்குவளை. (௩௬௫)

௩0௧௫. மற்றுங்கருங்குவளையின்பெயர்—நீலமுற்பலம் நீலோற்பலமுமாம். (௩௬௬)

௩0௧௬. கருநெய்தலின்பெயர்—நீல மிந்தீ வரங்கரு நெய்தல். (௩௬௭)

௩0௧௭. மற்றுங்கருநெய்தலின்பெயர்—நீலோற்பலமும் நிகழ்த்தப் பெறுமே. (௩௬௮)

உ௯௯௫. வாட்கோரையின்பெயர்—செருந்தி (௧)

உ௯௯௬. பச்சறுகின்பெயர்—பதம், தூர்வை. (உ)

உ௯௯௭. பசும்புல்லின்பெயர்—சட்பம். (௧)

உ௯௯௮. உலர்ந்தபுல்லின்பெயர்—திரணம். (௧)

உ௯௯௯. புற்பிடியின்பெயர்—காசை. (௧)

௩000. இளம்புல்லின்பெயர்—பதம். (௧)

௩00௧. ஒருவகைப்புல்லின்பெயர்—புதவு. (௧)

௩00உ. நீர்முள்ளியின்பெயர்—முண்டகம். (௧)

௩00௩. நீர்க்குளிரியின்பெயர்—கல்லாரம். (௧)

௩00௪. கத்தூரிமஞ்சளின்பெயர்—சுவாங்கி. (௧)

௩00௫. கிடையின்பெயர்—சடை. (௧)

௩00௬. பாசியின்பெயர்—நாரம், செவிரம், சடைச்சி, சைவலம், பதியம். (௫)

௩00௭. தாமரையின்பெயர்—அம்புயம், அம்போருகம், அரவிந்தம், பங்கயம், புண்டரீகம், பதுமம், முண்டகம், நளினம், முளரி, சரோருகம், சதபத்திரி, கோகனதம், சலசம், வனசம், கமலம், வாரிசம், கஞ்சம், திருமால்கொப்பூழ், திருமலர், இண்டை, பங்கேருகம். (உ௧)

௩00௮. தாமரைமலரின்பெயர்—இறும்பு, இராசீவம். (உ)

௩00௯. தாமரைக்கொட்டையின்பெயர்—பொகுட்டு, கன்னிகை. (உ)

௩0௧0. தாமரைச்சுருளின்பெயர்—விசி, வளையம். (உ)

௩0௧௧. தாமரைக்காயின்பெயர்—வராடகம், வராண்டம். (உ)

௩0௧உ. செங்குவளையின்பெயர்—அரத்தம், உற்பலம். (உ)

௩0௧௩. மற்றுஞ்செங்குவளையின்பெயர்—எருமணம், கல்லாரம், செங்கழுநீர். ஆட (௫)

௩0௧௪. கருங்குவளையின்பெயர்—பானல். (௧)

௩0௧௫. மற்றுங்கருங்குவளையின்பெயர்—நீலம், உற்பலம், நீலோற்பலம். ஆட (௪)

௩0௧௬. கருநெய்தலின்பெயர்—நீலம், இந்திவரம். (உ)

௩0௧௭. மற்றுங்கருநெய்தலின்பெயர்—நீலோற்பலம். ஆட (௩)

௩0௧அ. வெண்ணெய்தலின்பெயர்—வெள்ளாம்பல் குமுதம் வெண்ணி றநெய்தல். (௩௬௯)

௩0௧௯. செவ்வாம்பலின்பெயர்—சேதாம்பலரக்காம்பல் செவ்வாம்பல்செங்குமுதம். (௩௭0)

௩0உ0. மற்றுஞ்செவ்வாம்பலின்பெயர்—செவ்வல்லி செவ்வாம்பல். ()

௩0உ௧. வெள்ளாம்பலின்பெயர்—அல்லி வெள்ளாம்பல் கைரவமாகும்.

௩0உஉ. மற்றும்வெள்ளாம்பலின்பெயர்—வெள்ளல்லி வெள்ளாம்பல்.()

௩0உ௩. குமுதவகைப்பெயர்—வெள்ளாம்பல் சேதாம்ப லென்றிரு விகற்பங் - கொள்ப மன்றே குமுதப்பெயரே. (௩௭௪)

௩0உ௪. குமுதத்தின்பெயர்—ஆம்பலு நெய்தலு மல்லியுங் குமுதம். ()

௩0உ௫. செங்கழுநீரின்பெயர்—கல்லாரமுற்பலஞ் செங்கழுநீரே. (௩௭௬)

௩0உ௬. சிகைமாலையின்பெயர்—சிகழிகை படலிகை வாசிகை சிகைமாலை. (௩௭௭)

௩0உ௭. மார்பிலணிமாலையின்பெயர்—மஞ்சரி யிலம்பக மார்பிலணிமாலை. (௩௭அ)

௩0உஅ. தோளணிமாலையின்பெயர்—தொடைய ருமந் தோளணிமாலை.

௩0உ௯. கொண்டைமாலையின்பெயர்—கோதை தொங்கல் கொண்டைமாலை. (௩அ0)

௩0௩0. மயிர்ச்சூட்டுமாலையின்பெயர்—வாசிகை யலங்கன் மயிர்ச்சூட்டு மாலை. (௩அ௧)

## ஒன்பதாவது

### மரப்பெயர்வகை முற்றிற்று.

ஆக சூத்திரம் ௩0௩0.

---

௩0௧௮. வெண்ணெய்தலின்பெயர்—வெள்ளாம்பல், குமுதம். (௨)

௩0௧௯. செவ்வாம்பலின்பெயர்—சேதாம்பல், அரக்காம்பல், செங்குமுதம். (௩)

௩0௨0. மற்றுஞ்செவ்வாம்பலின்பெயர்—செவ்வல்லி. ஆ_(௪)

௩0௨௧. வெள்ளாம்பலின்பெயர்—அல்லி, கைரவம். (௨)

௩0௨௨. மற்றும்வெள்ளாம்பலின்பெயர்—வெள்ளல்லி. ஆ_(௩)

௩0௨௩. குமுதவகைப்பெயர்—வெள்ளாம்பல், சேதாம்பல். (௨)

௩0௨௪. குமுதத்தின்பெயர்—ஆம்பல், நெய்தல், அல்லி. (௩)

௩0௨௫. செங்கழுநீரின்பெயர்—கல்லாரம், உற்பலம். (௨)

௩0௨௬. சிகைமாலையின்பெயர்—சிகழிகை, படலிகை, வாசிகை. (௩)

௩0௨௭. மார்பிலணிமாலையின்பெயர்—மஞ்சரி, இலம்பகம். (௨)

௩0௨௮. தோளணிமாலையின்பெயர்—தொடையல், தாமம். (௨)

௩0௨௯. கொண்டைமாலையின்பெயர்—கோதை, தொங்கல். (௨)

௩0௩0. மயிர்ச்சூட்டுமாலையின்பெயர்—வாசிகை, அலங்கல். (௨)

## ஒன்பதாவது

### மரப்பெயர்வகை முற்றிற்று.

---

௩௮௨௬. பானு—நல்லொளிப் பெயரு ஞாயிறும் பானு. (௭௧௬)

௩௮௨௭. பிசி—பொய்யுஞ் சோறு மரும்பொருளும் பிசியே. (௭௧௭)

௩௮௨௮. பிசிதம்—விடக்கு நீறும் வேம்பும் பிசிதம். (௭௧௮)

௩௮௨௯. பிச்சம்—ஆண்பான் மயிரும் வெண்குடைப் பெயரும்- பீலிக் குடையும் பிச்ச மாகும். (௭௧௯)

௩௮௩௦. பிணிமுகம்—புட்பொதுப் பெயரு மயிலும் பிணிமுகம். (௮௦௦)

௩௮௩௧. பிணை—விருப்பமான் விலங்கின் பெண்டொடர் பும்பிணை. ()

௩௮௩௨. பிண்டம்—பிச்சையுந் திரட்சியும் பிண்ட மெனப்படும் (௮௦௨)

௩௮௩௩. பிண்டி—பிண்ணாக்கு மாவு மசோகமும் பிண்டி. (௮௦௩)

௩௮௩௪. பிதா—சங்கரன் பெயரு மயனுந் தாதையும்-பெருநாளைப்பெயரும் பிதாவாகும்மே. (௮௦௪)

௩௮௩௫. பிதிர்—துவலையு மொடியுங் கதையும் பிதிரே. (௮௦௫)

௩௮௩௬. பித்திகை—கருமுகை யுஞ்சுவர்த் தலமும் பித்திகை. (௮௦௬)

௩௮௩௭. பிரசம்—தேனீப் பெயருந் தேனும் பிரசம். (௮௦௭)

௩௮௩௮. பிள்ளை—காரிப் புள்ளுங் காரிக்கடவுளும்-பேசின்மகவும் பிள்ளையாகும். (௮௦௮)

௩௮௩௯. பிறங்கல்—மிகுதியு முயர்வும் பெருகலும் பிறங்கல். (௮௦௯)

௩௮௪௦. மற்றும்பிறங்கல்—மலையின் பெயரு மன்னு மதற்கே. (௮௧௦)

௩௮௪௧. பிறப்பு—அச்சமும் பவமுஞ் செறிவும் பிறப்பெனல். (௮௧௧)

௩௮௪௨. பீடிகை—பீடமுந் தட்டு மாவணமும் பீடிகை. (௮௧௨)

௩௮௪௩. பீதகம்—பொன்னிரு வேலி பொன்மை பீதகம். (௮௧௩)

௩௮௪௪. பீதம்—பொன்மையுஞ் சாந்தும் பொன்னும் பீதம். (௮௧௪)

௩௮௪௫. பீரு—அச்சமுற் றோனும் புருவமும் பீரு. (௮௧௫)

௩௮௪௬. பீலி—சயிலமு மயிலின் கலாபமுஞ் சவளமுஞ்-சின்னமுஞ்சிற்றால வட்டமும் பீலி. (௮௧௬)

௩௮௪௭. புகர்—புற்கெனு நிறம்வெள்ளி குற்றமும் புகரே. (௮௧௭)

௩௮௪௮. புகல்—யாக்கைசொல் வெற்றி குதிரும் புகலே. (௮௧௮)

௩௮௪௯. புங்கம்—அம்புக் குதைதுகி லுயர்ச்சியும் புங்கம். (௮௧௯)

௩௮௫௦. புட்டம்—புடவையுங் காக்கையும் புட்டமென்ப. (௮௨௦)

௩௮௫௧. புணரி—புணரி கடலுங் கடற்றிரை யும்மே. (௮௨௧)

௩௮௫௨. புணர்ச்சி—கலவியு மியைபும் புணர்ச்சி யென்ப. (௮௨௨)

௩௮௫௩. புண்டரீகம்—கமலமுந் திசையின் கரிகளி லொன்றும்-புலியும் வண்டும் புண்டரீகம்மே. (௮௨௩)

௩௮௫௪. புதவு—கதவுமொரு விகற்பப் புல்லும் புதவே. (௮௨௪)

௩௮௨௬. பானு எ-து—ஒளி, சூரியன். (௨)

௩௮௨௭. பிசி எ-து—பொய், சோறு, அரும்பொருள். (௩)

௩௮௨௮. பிசிதம் எ-து—இறைச்சி, விபூதி, வேம்பு. (௩)

௩௮௨௯. பிச்சம் எ-து—ஆண்மயிர், வெண்குடை, பீலிக்குஞ்சக்குடை. (௩)

௩௮௩௦. பிணிமுகம் எ-து—பறவைப்பொது, மயில். (௨)

௩௮௩௧. பிணா எ-து—ஆசை, மான், (நாய், பன்றி, புல்வாயிவற்றின்) பெண். (௩)

௩௮௩௨. பிண்டம் எ-து—பிச்சை, உண்டை. (௨)

௩௮௩௩. பிண்டி எ-து—பிண்ணாக்கு, இடித்தமா, அசோகமரம். (௩)

௩௮௩௪. பிதா எ-து—சிவன், பிரமன், தந்தை, பெருநாரை. (௪)

௩௮௩௫. பிதிர் எ-து—திவலை, காலநுட்பம், கதை. (௩)

௩௮௩௬. பித்திகை எ-து—சிறுசண்பகம், சுவர். (௨)

௩௮௩௭. பிரசம் எ-து—தேனீ, தேன். (௨)

௩௮௩௮. பிள்ளை எ-து—கரிக்குருவி, வைரவன், குழந்தை. (௩)

௩௮௩௯. பிறங்கல் எ-து—மிகுதி, உயர்வு, பெருக்கம். (௩)

௩௮௪௦. மற்றும்பிறங்கல் எ-து—மலை. (௧)

௩௮௪௧. பிறப்பு எ-து—அச்சம், உற்பத்தி, நெருக்கம். (௩)

௩௮௪௨. பீடிகை எ-து—ஆசனம், பூந்தட்டு, கடைவீதி. (௩)

௩௮௪௩. பீதகம் எ-து—பொன், இருவேலி, பொன்னிறம். (௩)

௩௮௪௪. பீதம் எ-து—பொன்னிறம், நால்வகைச் சாந்திலொன்று, பொன். (௩)

௩௮௪௫. பீரு எ-து—அச்சமுள்ளோன், புருவம். (௨)

௩௮௪௬. பீலி எ-து மலை, மயிற்றோகை, பெருஞ்சவளம், சிறுசின்னம், சிற்றாலவட்டம். (௫)

௩௮௪௭. புகர் எ-து—கபிலநிறம், சுக்கிரன், குற்றம். (௩)

௩௮௪௮. புகல் எ-து—சரீரம், சொல், வெற்றி, தானியக்கதிர். (௪)

௩௮௪௯. புங்கம் எ-து—அம்புக்குதை, புடைவை, உயர்ச்சி. (௩)

௩௮௫௦. புட்டம் எ-து—புடைவை, காக்கை. (௨)

௩௮௫௧. புணரி எ-து—கடல், கடற்றிரை. (௨)

௩௮௫௨. புணர்ச்சி எ-து—சையோகம், இணக்கம். (௨)

௩௮௫௩. புண்டரீகம் எ-து—தாமரை, தென்கீழ்த்திசையானை, புலி, வண்டு. (௪)

௩௮௫௪. புதவு எ-து—கதவு, ஓர்வகைப்புல். (௨)

௩௮௫. புத்தன்—போதிக்கிறைவனு மாயனும் புத்தன். (௮௨௫)

௩௮௬. புத்தேள்—புதுமையுந் தெய்வமும் புத்தேளாகும். (௮௨௬)

௩௮௭. புந்தி—புதனு மறிவுஞ் சிந்தையும் புந்தி. (௮௨௭)

௩௮௮. புரத்தல்—வண்மையுங் காத்தலும் வணங்குதலும் புரத்தல். ()

௩௮௯. புரவலன்—பூபா லனுங்கொடை யோனும் புரவலன். (௮௨௯)

௩௯௦. புணை—உவமை குற்ற முயர்வேயுட்டெப்ப-பொருளென்றின் னவை புணையெனலாகும். (௮௩௦)

௩௯௧. புலம்பு—தனிமையு மச்சமுஞ் சத்தமும் புலம்பே. (௮௩௧)

௩௯௨. புலவர்—அறிஞருஞ் சளுக்கியர் பெயரு மண்டருங் - கவிஞருங் கூத்தருங் கலைவல் லாளரும்-புரந்தர ருங்கண் ணாளரும் புலவர். (௮௩௨)

௩௯௩. புலி—சிங்க விராசியு நால்வகைச் சாந்தத்-தொன்றும் வியாக்கி ரமு முரைப்பர் புலியே. (௮௩௩)

௩௯௪. புலிங்கம்—பொறியுமூர்க்குருவியும் புலிங்க மாகும். (௮௩௪)

௩௯௫. புல்—அறுட மோர்புதலும்புற்கெனுநிறமும்-மொருசார்மரமும் பனையும்புலியும் - புணர்ச்சியும்புல்லெனப் புகலப்பெறுமே. (௮௩௫)

௩௯௬. புவனம்—புவனமு முலகும் புனலும் புவியுமாம். (௮௩௬)

௩௯௭. புளகம்—கண்ணாடியுங் குமிழ்த்தலு மன்னமும்புளகம் (௮௩௭)

௩௯௮. புள்—பகரிசை வண்டும் பறவைப் பெயரும்-புகலு மவிட்ட நாளும் புள்ளெனல். (௮௩௮)

௩௯௯. புறணி—குறிஞ்சி நிலமு முல்லையின் புறமுந் - தோலுமரப் பட்டையும் புறணியென்ப. (௮௩௯)

௪௦௦. புறம்பணை—குறிஞ்சி நிலமு முல்லையின் புறமும் - புறம்பணை யென்று புகலப் பெறுமே (௮௪௦)

௪௦௧. புறவணி—குறிஞ்சி நிலமு முல்லையும் புறவணி. (௮௪௧)

௪௦௨. புறவம்—முல்லை நிலமுங் காடும் புறவம். (௮௪௨)

௪௦௩. புனை—பொலிவு மழகுமொப் பனையும் புனையெனல். (௮௪௩)

௪௦௪. புன்கண்—துன்பமு நோயும் புன்கணென்ப. (௮௪௪)

௪௦௫. பூ—அவனியும் வனப்பு மலருங்கூர்மையும்-பொலிவும் பிறப்பும் பூவெனலாகும். (௮௪௫)

௪௦௬. பூகம்—கமுகுந் திரட்சியுங் கமுகும் பூகம். (௮௪௬)

௪௦௭. பூக்கம்—பூகமு மருத வூரும் பூக்கம். (௮௪௭)

௪௦௮. பூட்கை—யானை யாளிப்பெயரும் யானையு-மேற்கோளும்மிவை பூட்கையென்ப. (௮௪௮)

௪௦௯. பூதம்—பரணி நாளும் பல்லுயிர்ப்பெயரும்-பாரிடமுமிறந்தகால மூமாலும்-புனிதமும் புவிமுத லைந்தும் பூதம். (௮௪௯)

௩௮௫௫. புத்தன் எ-து—போதிவேந்தன், திருமால். (௨)

௩௮௫௬. புத்தேள் எ-து புதுமை, தெய்வம். (௨)

௩௮௫௭. புந்தி எ-து—புதன், அறிவு, சிந்தை. (௩)

௩௮௫௮. புரத்தல் எ-து—ஈகை, காத்தல், வணங்குதல். (௩)

௩௮௫௯. புரவலன் எ-து—அரசன், ஈகையாளன். (௨)

௩௮௬௦. புணை எ-து—உவமை, குற்றம், உயர்ச்சி, உட்டோணைப்பொருள். (௪)

௩௮௬௧. புலப்பு எ-து—தனிமை, அச்சம், சத்தம். (௩)

௩௮௬௨. புலவர் எ-து—அறிஞர், சளுக்கியர், தேவர், கவிவாணர், கூத்தர், புலமையோர், இந்திரர், கம்மாளர். (௮)

௩௮௬௩. புலி எ-து—சிங்கவிராசி, நால்வகைச்சாந்திலொன்று, புலி. (௩)

௩௮௬௪. புலிங்கம் எ-து—தீப்பொறி, ஊர்க்குருவி. (௨)

௩௮௬௫. புல் எ-து—அநுடநட்சத்திரம், புதல், புன்மைநிறம், புறக்காழ்மரம், பனைமரம், புலி, புணர்ச்சி. (௭)

௩௮௬௬. புவனம் எ-து—உலகின்பொது, நீர், பூமி (௩)

௩௮௬௭. புளகம் எ-து—கண்ணாடி, மயிர்சிலிர்த்தல், சோறு. (௩)

௩௮௬௮. புள் எ-து—வண்டு, பறவைப்பொது, அவிட்டநட்சத்திரம் (௩)

௩௮௬௯. புறணி எ-து—குறிஞ்சிநிலம், முல்லைநிலம், தோல், மரப்பட்டை (௪)

௩௮௭௦. புறம்பணை எ-து—குறிஞ்சிநிலம், முல்லைநிலம். (௨)

௩௮௭௧. புறவணி எ-து—குறிஞ்சிநிலம், முல்லைநிலம். (௨)

௩௮௭௨. புறவம் எ-து—முல்லைநிலம், காடு. (௨)

௩௮௭௩. புனை எ-து—பொலிவு, அழகு, அலங்காரம். (௩)

௩௮௭௪. புன்கண் எ-து—துன்பம், நோய். (௨)

௩௮௭௫. பூ எ-து—பூமி, அழகு, மலர், கூர்மை, பொலிவு, பிறப்பு. (௬)

௩௮௭௬. பூகம் எ-து—கமுகு, திரட்சி, கழுகு. (௩)

௩௮௭௭. பூக்கம் எ-து—கமுகு, மருதநிலத்தூர். (௨)

௩௮௭௮. பூட்கை எ-து—யானையாளி, யானை, மேற்கோள். (௩)

௩௮௭௯. பூதம் எ-து—பரணிநட்சத்திரம், உயிர், பூதகணம், இறந்தகாலம் ஆலமரம், சுத்தம், பிருதுவிமுதலியவைம்பூதம். (௭)

௩அ௮௦. பூதி—நீறுஞ் செல்வமு நிகழ்துர்க் கந்தமும்-பூதியென்பர் நரகும் புகலும். (அ௫௦)

௩அ௮௧. பூதியம்—புவியு முடம்புஞ் செல்வமும் பூதியம். (அ௫௧)

௩அ௮௨. பூரணம்—நிறைவுமோர் திதியும் பூரணமென்ப. (அ௫௨)

௩அ௮௩. பூருவம்—முதுமையுங் கிழக்கு முன்பும் பூருவம். (அ௫௩)

௩அ௮௪. பூவை—நாகணவாய்ப் புள்ளுங் காயாவும் பூவை. (அ௫௪)

௩அ௮௫. பூழ்தி—கொடுமையுந் தசையுநுண் பொடியும்பூழ்தி. (அ௫௫)

௩அ௮௬. பூளை—பொருப்பின் கணவாயுமோர் புதலும்பூளை. (அ௫௬)

௩அ௮௭. பேடு—அலியு மூருமத னுடலும் பேடு. (அ௫௭)

௩அ௮௮. பேதை—அறிவிலோனு மெளியனும்பேதை. (அ௫௮)

௩அ௮௯. பேராளன்—மிக்கோன் பெயரு மிருகசீரிடமும் - பெற்றியுளைக்கிற் பேராளன்னே. (அ௫௯)

௩அ௯௦. பை—படமும் பச்சையு மழகும் பையே. (அ௬௦)

௩அ௯௧. பொகுட்டு—சேற்றெழுமொக்குளு மலையும் பங்கயப்- பொன்னிறக்கொட்டையும் பொகுட்டெனலாகும். (அ௬௧)

௩அ௯௨. பொங்கர்—பொருப்பு மரத்தின் கொம்பும் பொங்கர். (அ௬௨)

௩அ௯௩. மற்றும்பொங்கர்—இலவின் பெயரு மியம்பல் வேண்டும். ()

௩அ௯௪. பொங்கல்—பொலிவு மிகுதியுங் கொக்தலும் பொங்கர். (அ௬௪)

௩அ௯௫. பொம்மல்—பொலிவுஞ்சோறும் பொருமலும் பொம்மல் (அ௬௫)

௩அ௯௬. பொருநன்—கொற்றவன் பெயருந் தலைவனுங்கூத்தனும் -வீரனுந்திண்ணியோனும் பொருநன். (அ௬௬)

௩அ௯௭. பொழில்—புவியுஞ் சோலையும் பெருமையும்பொழிலே (அ௬௭)

௩அ௯௮. பொறி—எழுத்துச் செல்வ மிலாஞ்சனை திருமகண்-மரக்கலம் யந்திரம் வரியிந்திரியம்-பொடித்தெழு நுண்சிறு கனலிவைபொறியே. (அ௬௮)

௩அ௯௯. பொறை—புவனமுந் துறுகலும் பொருப்பும் பொறையெனல்.

௩௯௦௦. பொற்பு—பொலிவு மழகு மொப்பனையும் பொற்பெனல் (அ௭௦)

௩௯௦௧. பொன்—அழகு மைவகை யுலோகமு மிரும்புந்-திருவும் வியாழமும் பொன்னெனச் செப்புவர். (அ௭௧)

௩௯௦௨. போகி—பொன்னுலகாளியும் பாம்பும் போகி. (அ௭௨)

௩௯௦௩. போகில்—பூமொட்டு நாபியும் புட்பொதுவும் போகில். (அ௭௩)

௩௯௦௪. போக்கு—வழியு மிளமரக் கன்றுங் குற்றமும்-புகலிற்போதலு நடையும் போக்கே. (அ௭௪)

௩௯௦௫. போதகம்—அப்பவருக்கமும் யானைக்கன்று-மிளமையு மரத்தின் கன்றும் போதகம். (அ௭௫)

௩௮௮0. பூதி எ-து—திருநீறு, செல்வம், துர்க்கந்தம், நரகம். (௪)

௩௮௮௧. பூதியம் எ-து—பூமி, உடம்பு, செல்வம். (௩)

௩௮௮௨. பூரணம் எ-து—நிறைவு, பௌர்ணமி. (௨)

௩௮௮௩. பூருவம் எ-து—பழமை, கிழக்கு, முன்பு. (௩)

௩௮௮௪. பூவை எ-து—நாகணவாய்ப்புள், காயாமரம். (௨)

௩௮௮௫. பூழ்தி எ-து—கொடுமை, தசை, நுண்பொடி. (௩)

௩௮௮௬. பூளை எ-து—மலைக்கணவாய், ஓர்செடி, (௨)

௩௮௮௭. பேடு எ-து—அலி, ஊர், மன்மதனுடல். (௩)

௩௮௮௮. பேதை எ-து—அறிவிலான், தரித்திரன். (௨)

௩௮௮௯. பேராளன் எ-து—மிக்கோன், மிருகசீரிடநட்சத்திரம். (௨)

௩௮௯0. பை எ-து—பாம்பின்படம், பச்சைநிறம், அழகு. (௩)

௩௮௯௧. பொருட்டு எ-து—சேற்றிலெழுங்குமிழி, மலை, தாமரைக்கொட்டை. (௩)

௩௮௯௨. பொங்கர் எ-து—மலை, மரக்கொம்பு. (௨)

௩௮௯௩. மற்றும்பொங்கர் எ-து—இலவமரம். ஆ. (௩)

௩௮௯௪. பொங்கல் எ-து—பொலிவு, மிகுதி, கொதித்துக்கிளர்தல். (௩)

௩௮௯௫. பொம்மல் எ-து—பொலிவு, சோறு, பொருமல். (௩)

௩௮௯௬. பொருநன் எ-து—அரசன், தலைவன், நாடகன், படைவீரன், திண்ணியோன். (௫)

௩௮௯௭. பொழில் எ-து—பூமி, சோலை, பெருமை. (௩)

௩௮௯௮. பொறி எ-து—எழுத்து, செல்வம், அடையாளம், இலக்குமி, மரக்கலம், இரேகை, இந்திரியம், தீப்பொறி. (௮)

௩௮௯௯. பொறை எ-து—பூமி, துறுகல், மலை. (௩)

௩௯00. பொற்பு எ-து—பொலிவு, அழகு, அலங்காரம். (௩)

௩௯0௧. பொன் எ-து—அழகு, பஞ்சலோகப்பொது, இரும்பு, இலக்குமி பிரகற்பதி. (௫)

௩௯0௨. போகி எ-து—தேவேந்திரன், பாம்பு. (௨)

௩௯0௩. போகில் எ-து—பூவரும்பு, கொப்பூழ், பறவைப்பொது, (௩)

௩௯0௪. போக்கு எ-து—வழி, இளமரக்கன்று, குற்றம், போதல், நடை. (௫)

௩௯0௫. போதகம் எ-து—அப்பவருக்கம், யானைக்கன்று, இளமை, மரக்கன்று. (௪)

௩௯0௬. போந்து—பல்லியும் பனையும் போந்தெனலாகும். (அஎ௬)

௩௯0எ. போர்—சமரமு மென்றுமதற் சும்மையுஞ் சதயமும்-புகலுங் காலை ப்போரெனலாகும். (அஎஎ)

௩௯0அ. போர்வை—தோலு மீக்கோளும் போர்வையாகும். (எஅஅ)

மகரவருக்கம்.

௩௯0௯. மகரம் —மலரின் றாதுஞ் சுறவும் மகரம். (அஎ௯)

௩௯௧0. மஞ்சரி—மலரின் றிரளுந் தளிரு மஞ்சரி. (அஅ0)

௩௯௧௧. மஞ்சு—எழிலும் பனியு மிளமையு மேகமும் - வலியும் யானை யின் முதுகு மஞ்சே. (அஅ௧)

௩௯௧௨. மடங்கல்—மடங்கலென் கிளவி மறலியு மிடியு - மடங்கலு நோயும் யாளியு மூழியு - மடங்கலும் வடவையு முடிவு மென்ப. (அஅ௨)

௩௯௧௩. மடி—பொய்யு நோயும் புடைவையுஞ் சோம்பும் - புலம்புங் கேடு மடக்கமுந் தாழையும் - வயிறு மடங்கலு மடியென லாகும். (அஅ௩)

௩௯௧௪. மடு—மடுவுநீர் நிலையு மடுவென வகுப்பர். (அஅ௪)

௩௯௧௫. மடை—பூண்கடைப் புணர்வுஞ் சோறு மடையே. (அஅ௫)

௩௯௧௬. மட்டு—மதுவு மளவு மட்டென லாகும். (அஅ௬)

௩௯௧எ. மணி—வனப்பு நவமணியு மௌத்திகமு நீலமுங் - கருநிறமு நன்மையுங் கண்டையு மணியே. (அஅஎ)

௩௯௧அ. மண்டலி—ஒருபெரும் பாம்பும் பூசையு மண்டலி (அஅஅ)

௩௯௧௯. மண்டிலம்—வட்டமு நாடுங் குதிரையு மண்டிலம் .(அஅ௯)

௩௯௨0. மதலை—மைந்தனுங் கொன்றை மரமுந் தூணு - மரக்கலமுங் கொடுங்கையு மதலை யாகும். (அ௯0)

௩௯௨௧. மதன்—வலியு மழகு மலர்க்கணை வேளு - மாட்சிமைப் பெயரு மதனென லாகும். (அ௯௧)

௩௯௨௨. திங்கள், மதி—முன்னிலை யசைச்சொலு மூடபதியு முணர்வு மன்னியமாதமு மதியென லாகும். (அ௯௨)

௩௯௨௩. மதியம்—சந்திரன் பெயரு மாதமுஞ் சாற்றிற்- றிங்களுமதியமு மெனச்சிறந் தனவே. (அ௯௩)

௩௯௨௪. மது—மதுவிள வேனிலுந் தேனுங் கள்ளுமாம். (அ௯௪)

௩௯௨௫. மதுகம்—அட்டிமதுரமு மிருப்பையுந் தராவும் - வண்டு மழகு மதுக மாகும். (அ௯௫)

௩௯௨௬. மத்திகை—மாலையுஞ் சம்மட்டியு மத்திகை யாகும். (அ௯௬)

௩௯௨எ. மந்தரம்—மந்த வோசையு மேருவு மந்தரம். (அ௯எ)

௩௯௨அ. மந்தாரம்—தெய்வ மரத்திலொன்றுஞ் செம் பரத்தையு - மந் தார மென்று வழங்கப் பெறுமே. (அ௯அ)

௩௯௦௬. போந்து எ-து—பல்லி, பனை. (௨)

௩௯௦௭. போர் எ-து—யுத்தம், நெற்போர், சதயநட்சத்திரம். (௩)

௩௯௦௮. போர்வை எ-து—தோல், மேற்போர்வை. (௨)

## மகாவருக்கம்.

௩௯௦௯. மகரம் எ-து—பூந்தாது, சுறாமீன். (௨)

௩௯௧௦. மஞ்சரி எ-து—பூங்கொத்து, தளிர். (௨)

௩௯௧௧. மஞ்சு எ-து—அழகு, பனி, இளமை, மேகம், வலி, யானைமுதுகு. (௬)

௩௯௧௨. மடங்கல் எ-து—இயமன், இடி, சிங்கம், நோய், யாளி, யுகமுடிவு, மடங்குதல், வடவாமுகாக்கினி, இறுதி. (௯)

௩௯௧௩. மடி எ-து—பொய், வியாதி, புடைவை, சோம்பல், புலம்பு, கேடு, அடக்கம், தாழை, வயிறு, மடங்குதல். (௧௦)

௩௯௧௪. மடு எ-து—மடு, நீர்நிலை. (௨)

௩௯௧௫. மடை எ-து—பூண்கடைப்புணர்வு, அன்னம். (௨)

௩௯௧௬. மட்டு எ-து—கள், எல்லை. (௨)

௩௯௧௭. மணி எ-து—அழகு, நவமணிப்பொது, முத்து, நீலம், கருமை, நன்மை, கண்டைமணி. (௭)

௩௯௧௮. மண்டலி எ-து—ஓர்பாம்பு, பூனை. (௨)

௩௯௧௯. மண்டிலதம் எ-து—வட்டம், நாடு, குதிரை. (௩)

௩௯௨௦. மதலை எ-து—பிள்ளை, கொன்றைமரம், தூண், மரக்கலம், கொடுங்கை. (௫)

௩௯௨௧. மதன் எ-து—வலிமை, அழகு, மன்மதன், மாட்சிமை. (௪)

௩௯௨௨. மதி எ-து—முன்னிலையசைச்சொல், சந்திரன், புத்தி, மாதம். (௪)

௩௯௨௩. திங்கள், மதியம் எ-து—சந்திரன், மாதம். (௨)

௩௯௨௪. மது எ-து—இளவேனில், தேன், கள். (௩)

௩௯௨௫. மதுகம் எ-து—அதிமதுரம், இனிமை, இலுப்பைமரம், தரா, வண்டு, அழகு. (௬)

௩௯௨௬. மத்திகை எ-து—பூமாலை. குதிரைச்சம்மட்டி. (௨)

௩௯௨௭. மந்தரம் எ-து—மந்தவோசை, ஓர்மலை. (௨)

௩௯௨௮. மந்தாரம் எ-து—தெய்வமரத்திலொன்று, செம்பரத்தை. (௨)

௯௯௨௯. மந்தி—மந்திபெண் குரங்கும் வண்டு முசுவுமாம் (அ௯௯)

௯௯௩0. மந்திரம்—கோவிலுங் குதிரைப் பந்தியு மெண்ணமு - மதுவும் வீடு மறையு மந்திரம். (௯00)

௯௯௩௧. மயல்—அவாவின் பெயரு மலகைப் பெயரு-மயலென் றறைந் தனர் வாய்மொழிப் புலவர். (௯0௧)

௯௯௩௨. மயிலை—மீனின் பொதுவு மீனவிராசியு- மலரிரு வாட்சியு மயிலையாகும். (௯0௨)

௯௯௩௩. மரக்கால்—அளவையு மாயவனுடலு மன்றி - வளவிய சோதியு மரக்காலாகும். (௯0௩)

௯௯௩௪. மருள்—பேயுங் குறிஞ்சி யாழின் றிறனு-மாலுமோர் புதலு மருளென் றாகும். (௯0௪)

௯௯௩௫. மல்—மாயோ னுடலும் வலியு மல்லெனல். (௯0௫)

௯௯௩௬. மல்லிகை—மாலதி சுடர்நிலைத் தண்டிவை மல்லிகை. (௯0௬)

௯௯௩௭. மழை—மழையே குளிர்ச்சியும் வருடமு மேகமும். (௯0௭)

௯௯௩௮. மள்ளர்—செருமலை வீரருந் திண்ணி யோரு-மருதநில மாக்களு மள்ள ரென்ப. (௯0௮)

௯௯௩௯. மறம்—சினமும் பாவமும் பிணக்குங் கூற்றும் - வலியுஞ் சேவகமும் வம்பு மறமே. (௯0௯)

௯௯௪0. மறலி—அயர்ப்புங் கூற்று மழுக்காறு மறலி. (௯௧0)

௯௯௪௧. மறவர்—வேடர்தம் பெயரும் வீரரு மறவர். (௯௧௧)

௯௯௪௨. மறவி—மறப்பு மழுக்கா று மறவி யாகும். (௯௧௨)

௯௯௪௩. மனவு—மணிப்பெயரு மக்கு மணியு மனவே. (௯௧௩)

௯௯௪௪. மன்—மறையு முத்திரட் டாதியு மரசனு - நிலையு மிகுதியு மாக்கமு மொழிவு - முறைசெயி லிடைச் சொலு மன்னென் றுரைக்கும், (௯௧௪)

௯௯௪௫. மன்றம்—வாய்மைவெளி வாசம் பொதுவு மன்றம் (௯௧௫)

௯௯௪௬. மன்றல்—பாலையா ழிசையுங் கடிப் பரிமளமும் - வதுவையு மென்றிவை மன்ற லாகும்- (௯௧௬)

௯௯௪௭. மன்னல்—பீடும் வலியு மடுப்பது மன்னல். (௯௧௭)

௯௯௪௮. மன்னன்—அரசனு முத்திரட் டாதியு மன்னன். (௯௧௮)

௯௯௪௯. மா—ஒருமரப் பெயரு மழைத்தலுங் கறுப்புங்-குதிரையும் விலங்குந் திருவும் வனப்பும் - வலியும் வண்டும் பிண்டியுஞ் செல்வமு - நிறனும் பெருமையு நிலனு மோரிலக்கமு - மருவிய பெயரு மாவென லாகும். (௯௧௯)

௯௯௫0. மாசு—குற்றமு மேகமு மழுக்கு மாசே. (௯௨0)

௯௯௫௧. மாடம்—மனையு முழுந்து மாட மாகும். (௯௨௧)

௬௬௨௯. மந்தி எ-து—பெண்குரங்கு, வண்டு, பெண்முசு. (௩)

௬௩௩0. மந்திரம் எ-து—கோவில், குதிரைப்பந்தி, எண்ணம், கள், வீடு வேதம். (௬)

௬௩௩௧. மயல் எ-து—ஆசை, பிசாசம். (௨)

௬௩௩௨. மயிலை எ-து—மீன்பொது' மீனவிராசி, இருவாட்சி. (௩)

௬௩௩௩. மரக்கால் எ-து—முகந்தளக்குங்கருவியிலொன்று, திருமால்கூத்து, சோதிநட்சத்திரம். (௩)

௬௩௩௪. மருள் எ-து—பிசாசம், குறிஞ்சியாழ்த்திறம், மயக்கம், ஓர் புதல். (௪)

௬௩௩௫. மல் எ-து—திருமால்கூத்து, வலி. (௨)

௬௩௩௬. மல்லிகை எ-து—ஓர்பூச்செடி, விளக்குத்தண்டு. (௨)

௬௩௩௭. மழை எ-து—குளிர்ச்சி, மாரி, மேகம். (௩)

௬௩௩௮. மள்ளர் எ-து—வீரர், திண்ணியோர், மருதநிலமாக்கள். (௩)

௬௩௩௯. மறம் எ-து—சினம், பாவம், பிணக்கு, நமன், வலி, வீரம், சண்டை. (௭)

௬௩௪0. மறலி எ-து—மறதி, நமன், பொறாமை. (௩)

௬௩௪௧. மறவர் எ-து—வேடர், படைவீரர். (௨)

௬௩௪௨. மறவி எ-து—மறப்பு பொறாமை. (௨)

௬௩௪௩. மனவு எ-து—மணி, சங்குமணி. (௨)

௬௩௪௪. மன் எ-து—மந்திரம், உத்திரட்டாதிநட்சத்திரம், அரசன், நிலைபேறு, மிகுதி, ஆக்கம், ஒழிவு, இடைச்சொல். (௮)

௬௩௪௫. மன்றம் எ-து—உண்மை, வெள்ளிடை, மணம், சபை. (௪)

௬௩௪௬. மன்றல் எ-து—பாலையாழிசை, மிக்கபரிமளம் கலியாணம் (௩)

௬௩௪௭. மன்னல் எ-து—பெருமை, வலிமை, அடுத்தல். (௩)

௬௩௪௮. மன்னன் எ-து—அரசன், உத்திரட்டாதிநட்சத்திரம். (௨)

௬௩௪௯. மா எ-து—மாமரம், அழைத்தல், கறுப்பு, குதிரை, விலங்கின் பொது, இலக்குமி, அழகு, வலிமை, வண்டு, தென்மா, செல்வம், நிறம், பெருமை, பூமி, ஓரெண் (௧௫)

௬௩௫0. மாசு எ-து—குற்றம், மேகம், அழுக்கு. (௩)

௬௩௫௧. மாடம் எ-து—வீடு, உழுந்து. (௨)

௩௯௫௨. மாதர்—அரிவையரு மழகுங் காதலு மாதர் (௯௨௨)

௩௯௫௩. மாதவம்—மதுவுநற் றவமு மிளவேனிலு மாதவம். (௯௨௩)

௩௯௫௪. மாதா—வாணியுங் கௌரியு மன்னையு மாதா. (௯௨௪)

௩௯௫௫. மாதிரம்—மலையுந் திசையும் யானையு மாதிரம். (௯௨௪)

௩௯௫௬. மாந்தல்—உண்டலுங் குடித்தலு மிறத்தலு மாந்தல். (௯௨௫)

௩௯௫௭. மாரி—மழையு முகிலு மரணமு மதுவும் - வடுகியு நோயுமோர் புள்ளு மாரி. (௯௨௬)

௩௯௫௮. மார்க்கம்—வழியுஞ் சமயமுந் தெருவு மார்க்கம். (௯௨௭)

௩௯௫௯. மாலதி—மாலதி சுடர்நிலைத் தண்டுநிரு வாணமும். (௯௨௮)

௩௯௬0. மாலை—இரவுந் தொடுத்த தொடையலு மந்தியும் . வரன்முறை யொழுக்கமு மியல்பு மாலை. (௯௨௯)

௩௯௬௧. மால்—வாயு கருமை பெருமை மதிமகன் - மாயோன் மேக மயக்கம் வேட்கை - மாலென் றுரைப்பர்கண் ணேணியு மாகும். (௯௩0)

௩௯௬௨. மாழை—அழகு திரட்சி யாடக மாமர - மோலை மடமை யுலோகக் கட்டி - புளிமா மாழை யாகு மென்ப. (௯௩௧)

௩௯௬௩. மான்—விலங்கின் பெயரும் வெற்புங் குதிரையு-மகர விராசியு முழையு மானெனல். (௯௩௨)

௩௯௬௪. மிசை—மேடு மொழியு மிசையென விளம்புவர். (௯௩௩)

௩௯௬௫. மிச்சை—மிச்சை பொய்த்தலஞ் ஞானமு மிடித்தலும். (௯௩௪)

௩௯௬௬. மீளி—பெருமையும் வலியுந் தலைவன் பெயரும் - விறலோன் பெயரு மீளி யாகும். (௯௩௫)

௩௯௬௭. மீன்—மச்சப் பெயரும் வானத் துடுவுஞ் - சித்திரை நாளு மீனெனச் செப்புவர். (௯௩௬)

௩௯௬௮. முகில்—திரளு மேகமு முகிலெண லாகும். (௯௩௭)

௩௯௬௯. முடங்கல்—மூங்கிலுந் தாழையு முடங்க லென்ப. (௯௩௮)

௩௯௭0. முடலை—உண்டையுந் திரட்சியும் பெருமையு முடலை. (௯௩௯)

௩௯௭௧. முண்டகம்—தாமரைப் பெயருந் தாழையுங் கள்ளு - முள்ளுடை முள்ளியு நெற்றியு முண்டகம். (௯௪0)

௩௯௭௨. முதலை—முதலை செங்கிடையு முருந்து மிடங்கரும். (௯௪௧)

௩௯௭௩. முதுமை—முற்றுதற் பெயரும் பழமையு முதுமை. (௯௪௨)

௩௯௭௪. முரசு—உத்திராட் டாதியும் பறையு முரசெனல். (௯௪௩)

௩௯௭௫. முரண்—பகையும் வலியு முரணெனப் பகர்வர். (௯௪௪)

௩௯௭௬. முரம்பு—பரலடுத்த நிலமும் பாறையு முரம்பே. (௯௪௫)

௩௯௭௭. முருகு—இளமையு நாற்றமுங் கள்ளும் விழவு - முருக வேளு மழகு முருகே. (௯௪௬)

௩௬௫௨. மாதர் எ-து—பெண்கள், அழகு, ஆசை. (௩)

௩௬௫௩. மாதவம் எ-து—கள், தவம், வசந்தகாலம். (௩)

௩௬௫௪. மாதா எ-து—நாமகள், பார்வதி, தாய். (௩)

௩௬௫௫. மாதிரம் எ-து—மலை, திசை, யானை. (௩)

௩௬௫௬. மாந்தல் எ-து—உண்டல், குடித்தல், இறத்தல், (௩)

௩௬௫௭. மாரி எ-து—மழை, மேகம், சாவு, கள், காடுகாள், ஓர்வியாதி, ஓர்பறவை. (௭)

௩௬௫௮. மார்க்கம் எ-து—வழி, சமயம், வீதி. (௩)

௩௬௫௯. மாலதி எ-து—விளக்குத்தண்டு, நிருவாணம். (௨)

௩௬௬0. மாலை எ-து—இரா, தொடுத்தமாலை, அந்திப்பொழுது, வரன்முறை, ஒழுக்கம், இயல்பு. (௬)

௩௬௬௧. மால் எ-து—காற்று, கருமை, பெருமை, புதன், திருமால், மேகம், மயக்கம், வேட்கை, கண்ணேணி. (௯)

௩௬௬௨. மாழை எ-து—அழகு, திரட்சி, பொன், மாமரம், ஓலை, அறிவின்மை, உலோகக்கட்டி, புளிமா. (௮)

௩௬௬௩. மான் எ-து—விலங்கின் பொது, மலை, குதிரை, மகரவிராசி, மான். (௫)

௩௬௬௪. மிசை எ-து—மேடு, மேல் என்னுஞ்சொல். (௨)

௩௬௬௫. மிச்சை எ-து—பொய்யாதல், அஞ்ஞானம், வறுமையுறல். (௩)

௩௬௬௬. மீளி எ-து—பெருமை, வலிமை, பாலைநிலத்தலைவன், திண்ணியன். (௪)

௩௬௬௭. மீன் எ-து—மச்சம், விண்மீன், சித்திரைநட்சத்திரம் (௩)

௩௬௬௮. முகில் எ-து—திரள், மேகம். (௨)

௩௬௬௯. முடங்கல் எ-து—மூங்கில், தாழை. (௨)

௩௬௭0, முடலை எ-து—உண்டை, திரட்சி, பெருமை. (௩)

௩௬௭௧. முண்டகம் எ-து—தாமரை, தாழை, கள், முள்ளிச்செடி, நெற்றி. (௫)

௩௬௭௨. முதலைஎ-து—செந்நெட்டி, இறகினடிக்குருத்து, நீர்வாழ்முதலை (௩)

௩௬௭௩. முதுமை எ-து—முற்றுதல், பழமை. (௨)

௩௬௭௪. முரசு எ-து—உத்திரட்டாதிநட்சத்திரம், வாச்சியப்பொது. (௨)

௩௬௭௫. முரண் எ-து—பகை, வலிமை. (௨)

௩௬௭௬. முரம்பு எ-து—பரலடுத்துயர்நிலம், பாறை. (௨)

௩௬௭௭. முருகு எ-து—இளமை, வாசனை, கள், திருவிழா, குமரன், அழகு. (௬)

௩௯௭௮. முளரி—கமலமு நுட்பமுங் காடு நெருப்பு - முளரி யென்ன மொழிந்திசி னோரே. (௯௪௭)

௩௯௭௯. முளை—மூங்கிலுஞ் சுதனுமங் குரிப்பு முளையே. (௯௪௮)

௩௯௮௦. முறம்—விசாகமுஞ் சுளகும் விளம்புவர் முறமே. (௯௪௯)

௩௯௮௧. முறிகுளம்—அணைமுறி குளமும் பூராடமு முறிகுளம். (௯௫௦)

௩௯௮௨. முறுவல்—பல்லுஞ் சிரிப்பு முறுவலென்ப. (௯௫௧)

௩௯௮௩. முறை—கோசமும் பழமையு மூழுங்கூட்டு - மார்ப்புமுறைமையு முறையெனலாகும். (௯௫௨)

௩௯௮௪. முனி—இருடியும் வில்லும் யானைக்கன்று - முனியென்றுரைப்ப வகத்தியு மொழிப. (௯௫௩)

௩௯௮௫. முனை—பகையும் வேண்டாமையும் வினையு முனையே. (௯௫௪)

௩௯௮௬. முன்னம்—சீக்கிரி மரமுமுற் காலமுஞ் சிங்கமு- முன்னமென்று மொழியப் பெறுமே. (௯௫௫)

௩௯௮௭. மூசல்—மொய்த்தலு மரணமு மூச லென்ப. (௯௫௬)

௩௯௮௮. மூரல்—முறுவலும் பல்லுஞ் சோறு மூரல். (௯௫௭)

௩௯௮௯. மூரி—எருமையு மெருதும் பெருமையுஞ் சோம்பும் - வலியு முரணு நெரிவு மூரி. (௯௫௮)

௩௯௯௦. மூலம்—ஒருநாண் மீனு மேதுவுங் கிழங்கு- மூலமென்று மொழியப் பெறுமே. (௯௫௯)

௩௯௯௧. மெத்தை—சட்டை யணையிவை மெத்தை யாகும். (௯௬௦)

௩௯௯௨. மெய்—யாக்கையும் வாய்மையு மெய்யெனலாகும். (௯௬௧)

௩௯௯௩. மேடம்—மெய்புகு கருவியும் யாடுமேடம். (௯௬௨)

௩௯௯௪. மேடு—உயரமும் பெருமையு வயிறு மேடே. (௯௬௩)

௩௯௯௫. மேதை—புதனு மறிஞனு நரம்பு மேதை. (௯௬௪)

௩௯௯௬. மேல்—மேற்கு மும்பரு மேன்மையு மேலே. (௯௬௫)

௩௯௯௭. மை—அஞ்சனங் குற்றங் கருநிறமலடு - மஞ்சும்யாடுமையெனலாகும். (௯௬௬)

௩௯௯௮. மொக்குள்—பூவின் மொட்டுங் குமிழியு மொக்குள். (௯௬௭)

௩௯௯௯. மொய்—திரளும் யானையுஞ் செருக்கள மும்மொய். (௯௬௮)

௪௦௦௦. மொய்ம்பு—வலியுந்தோளு மொய்ம்பெனலாகும். (௯௬௯)

௪௦௦௧. மோடு—உயரமும் பெருமையும் வயிறு மோடெனல். (௯௭௦)

௪௦௦௨. மௌவல்—வனமல்லிகை யுங்குளிர் வாரமு மௌவல். (௯௭௧)

**யகரவருக்கம்.**

௪௦௦௩. யாணர்—கண்ணுளர் பெயரும் புதுமையு மழகு - நன்றும் யாணரெனும்பெயர் நவில்வர். (௯௭௨)

௩௯௭௮. முளரி எ-து—தாமரை, நுண்மை, காடு, தீ. (௪)

௩௯௭௯. முளை எ-து—மூங்கில், மகன், அங்குரம். (௩)

௩௯௮0. முறம் எ-து—விசாகநட்சத்திரம், சுளகு (௨)

௩௯௮௧. முறிகுளம் எ-து—உடைகுளம், பூராடநட்சத்திரம். (௨)

௩௯௮௨. முறுவல் எ-து—பல், சிரிப்பு. (௨)

௩௯௮௩. முறை எ-து—புத்தகம், பழமை, நீதி, கூட்டு, கட்டு, முறைமை (௬)

௩௯௮௪. முனி எ-து—இருடி, வில், யானைக்கன்று. அகத்திமரம். (௪)

௩௯௮௫. முனை எ-து—பகை, வெறுப்பு, வினை. (௩)

௩௯௮௬. முன்னம் எ-து—சிக்கிரிமரம், முற்காலம், சிங்கம். (௩)

௩௯௮௭. மூசல் எ-து—மொய்த்தல், சாதல். (௨)

௩௯௮௮. மூரல் எ-து—சிரிப்பு, பல், சோறு. (௩)

௩௯௮௯. மூரி எ-து—எருமை, எருது, பெருமை, சோம்பல், வலிமை முரண், நெரிவு. (௭)

௩௯௯0. மூலம் எ-து—மூலநட்சத்திரம், காரணம், கிழங்கு. (௩)

௩௯௯௧. மெத்தை எ-து—சட்டை, அமளி. (௨)

௩௯௯௨. மெய் எ-து—உடல், உண்மை. (௨)

௩௯௯௩. மேடம் எ-து—கவசம், யாடு. (௨)

௩௯௯௪. மேடு எ-து—உயரம், பெருமை, வயிறு. (௩)

௩௯௯௫. மேதை எ-து—புதன், அறிஞன், நரம்பு. (௩)

௩௯௯௬. மேல் எ-து—மேற்கு, ஆகாயம், மேன்மை. (௩)

௩௯௯௭. மை எ-து—அஞ்சனம், குற்றம், கருமை, மலடு, மேகம், யாடு. (௬)

௩௯௯௮. மொக்குள் எ-து—பூவரும்பு, நீர்க்குமிழி. (௨)

௩௯௯௯. மொய் எ-து—கூட்டம், யானை, போர்க்களம். (௩)

௪000. மொய்ம்பு எ-து—வலிமை, தோள். (௨)

௪00௧. மோடு எ-து—உயரம், பெருமை, வயிறு. (௩)

௪00௨. மௌவல் எ-து—வனமல்லிகை, குளிர்வாரம். (௨)

## யகரவருக்கம்.

௪00௩. யாணர் எ-து—கம்மாளர், புதுமை, அழகு, நன்மை. (௪)

௪௦௦௪. யாமம்—இரவுஞ் சாமமுந் தெற்கும் யாமம். (௯௭௩)

௪௦௦௫. யாழ்—மிதுன விராசியும் வீணைக்கருவியு - மசுபதி நாளும் யாழெனலாகும். (௯௭௪)

௪௦௦௬. யூகம்—உடற்குறை கருங்குரங் கோர்தல் கோட்டா - னுட்பொருடருக்கம்யூகமாகும். (௯௭௫)

௪௦௦௭. யூபம்—வேள்வித்தறி கவந்தம் படையுறுப்பும் யூபம். (௯௭௬)

வகரவருக்கம்,

௪௦௦௮. வங்கம்—வழுதுணைப் பெயரும் வெள்ளியு மீயமும் - வங்கமென் பகாவாயுமாகும். (௯௭௭)

௪௦௦௯. வசதி—நகரமு மனையுந் தாவும் வசதி. (௯௭௮)

௪௦௧௦. வசந்தம்—வசந்தஞ்சல் லாபமுஞ் சித்திரை மாதமும். (௯௭௯)

௪௦௧௧ வசி—வசியே கூர்மை வசிவாள் வடுவுமாம். (௯௮௦)

௪௦௧௨. வசு—தேவர் கோதனந் தீபொன்னும் வசு. (௯௮௧)

௪௦௧௩. வஞ்சம்—வாளும் பொய்யுங் கொடுமையும் வஞ்சம். (௯௮௨)

௪௦௧௪. வஞ்சனை—மாயையும் பெண்ணும் பொய்யும் வஞ்சனை. (௯௮௩)

௪௦௧௫. வஞ்சி—போரின்மேற் செலவும் புதலுமங்கையரும் - பாவிலோர் பாவு மோர்பதிப் பெயரு - மாற்றருங் குடையும் வஞ்சியாகும். (௯௮௪)

௪௦௧௬. மற்றும்வஞ்சி—மருதயாழ்த் திறத்தோ ரோசையும் வகுப்பர். (௯௮௫)

௪௦௧௭. வடகம்—அந்தவாளப்பட்டு மதளும் வடகம். (௯௮௬)

௪௦௧௮. வடவை—வடவா வனலு மடநடைப் பிடியு-மெருமைப்பெயருங் குதிரையும் வடவை. (௯௮௭)

௪௦௧௯. வடு—தழும்புஞ் செம்புந்தவறும் வண்டும்- வடுவென வுரைக்குமரபாகும்மே. (௯௮௮)

௪௦௨௦. வடுகு—மருதயா ழோர்குல மிந்தளமும் வடுகே. (௯௮௯)

௪௦௨௧. வட்டம்—பரிசை பாரா வளையங் கைம்மணி- திரிகை வலயஞ் சாலூர்கோள் வட்டம். (௯௯௦)

௪௦௨௨. வண்டு—குருநாளுங் குற்றமு மளியுங்கை வளையு - நூலு மம்புஞ் சங்கும் வண்டெனல். (௯௯௧)

௪௦௨௩. வண்ணம்—வனப்புஞ் சந்தமுங்குணமும் வண்ணம். (௯௯௨)

௪௦௨௪. வண்மை—வலிவளங்கொடைவாய்மை வண்மை. (௯௯௩)

௪௦௨௫. வதுவை—வதுவைகலி யாணமு மணமு மாகும். (௯௯௪)

௪௦௨௬. வம்பு—மணமுநிலை யின்மையும் பாடரும் புதுமையு-முலையின் கச்சும் படிறும்வம்பே. (௯௯௫)

௪௦௦௪. யாமம் எ-து—இரவு, சாமம், தெற்கு. (௩)

௪௦௦௫. யாழ் எ-து—மிதுனவிராசி, வீணை, அச்சுவினிநாள். (௩)

௪௦௦௬. யூகம் எ-து—கவந்தம், கருங்குரங்கு, ஆராய்தல், கோட்டான், அகப்பொருளறிதல், தருக்கம். (௬)

௪௦௦௭. யூபம் எ-து—வேள்வித்தம்பம், உடற்குறை, படைவகுப்பு. (௩)

## வகரவருக்கம்.

௪௦௦௮. வங்கம் எ-து—சுத்திரிச்செடி, வெள்ளி, ஈயம், மரக்கலம். (௪)

௪௦௦௯. வசதி எ-து—நகரம், வீடு, நல்லிடம். (௩)

௪௦௧௦. வசந்தம் எ-து—சல்லாபம், சித்திரைமாதம். (௨)

௪௦௧௧. வசி எ-து—கூர்மை, வசியம், வாள், தழும்பு. (௪)

௪௦௧௨. வசு எ-து—அட்டவசுக்கள், பசுவின்கன்று, நெருப்பு, பொன். (௫)

௪௦௧௩. வஞ்சம எ-து—வாள், பொய், கொடுமை. (௩)

௪௦௧௪. வஞ்சனை எ-து—மாயை, தெய்வப்பெண், பொய். (௩)

௪௦௧௫. வஞ்சி எ-து—பகைவர் மேற்செல்லல், ஓர்கொடி, பெண்கள், ஓர்பா, கருவூர், குடை. (௬)

௪௦௧௬. மற்றும் வஞ்சி எ-து—மருதயாழ்த்திறத்தொன்று. ஆடூ (௭)

௪௦௧௭. வடகம் எ-து—அத்தவாளம், தோல். (௨)

௪௦௧௮. வடவை எ-து—ஊழித்தீ, பெண்யானை, எருமை, பெண்குதிரை (௪)

௪௦௧௯. வடு எ-து—தழும்பு, செம்பு, குற்றம், வண்டு. (௪)

௪௦௨௦. வடுகு எ-து—மருதயாழ்த்திறம், ஓர்சாதி, இந்தளவிராகம். (௩)

௪௦௨௧. வட்டம் எ-து—கேடகம், விளாதடி, கைம்மணி, திரிகை, வாகுவலயம், நீர்ச்சால், பரிவேடம். (௭)

௪௦௨௨. வண்டு எ-து—பூசநாள், குற்றம், வண்டு, கைவளை, நூல், அம்பு சங்கு, (௭)

௪௦௨௩. வண்ணம் எ-து—அழகு, சந்தம், குணம். (௩)

௪௦௨௪. வண்மை எ-து—வலிமை, வளமை, ஈகை, உண்மை. (௪)

௪௦௨௫. வதுவை எ-து—கலியாணம், வாசனை, (௨)

௪௦௨௬. வம்பு எ-து—வாசனை, நிலையின்மை, புதுமை, முலைக்கச்சு, வஞ்சனை. (௫)

௪௦௨௭. வயம்—வலியு நீரும் புள்ளும் வயமெனல். (௯௯௬)

௪௦௨௮. வயல்—வெளியுஞ் செய்யும் வயலென்றாகும். (௯௯௭)

௪௦௨௯. வயவன்—திண்ணியோன் பெயரும் வேட்டோன்பெயரு - வலியோன் பெயரும் வயவ னென்ப. (௯௯௮)

௪௦௩௦. வயா—வருத்தமுங் கருவும் விருப்பமும் வயாவே. (௯௯௯)

௪௦௩௧. வயிரம்...தணியா முனிவுங் கூர்மையு மணியும் - வச்சிரப் பெயருங் காழும் வயிரம். (௧௦௦௦)

௪௦௩௨. வரி—இசையும் பாட்டு மெழுத்து மிறையு - நெல்லுங் கடலு நிறமுஞ் சுணங்குஞ் - சந்தித் தெருவுங் கடனும் வரியே. (௧௦௦௧)

௪௦௩௩. வருடம்—மழையு மாண்டும் வருடமாகும். (௧௦௦௨)

௪௦௩௪. வருணம்—குலமு நீரு மழகும் வருணம். (௧௦௦௩)

௪௦௩௫. வரை—அளவுங் கையிறையு மலையு மூங்கிலும் - வரைவு மெழுத்து ம்வரையென லாகும். (௧௦௦௪)

௪௦௩௬. வலம்புரி—நந்தியா வர்த்தமுஞ் சங்கும் வலம்புரி. (௧௦௦௫)

௪௦௩௭. வலவை—வஞ்சப் பெண்ணும் வல்லோனும் வலவை. (௧௦௦௬)

௪௦௩௮. வலி—வலியே யொலியும் வலியோனும் வஞ்சமும் (௧௦௦௭)

௪௦௩௯. வலித்தல்—வலித்த லென்பது நிணத்தலும் பேசலும். (௧௦௦௮)

௪௦௪௦. வழங்கல்—வண்மையு முலாவுதலும் வழங்க லென்ப. (௧௦௦௯)

௪௦௪௧. வழி—மரபு மொழுக்க முந்திரட்சியுமகாரு - மிடமும் பின்னு முறைமையும் வழியே- (௧௦௧௦)

௪௦௪௨. வளம்—மாட்சிமை கொழுப்புந் தருதி வளமெனல். (௧௦௧௧)

௪௦௪௩. வள்—வலிப்பற் றிரும்பும் வாளுங் காதும் - வலியுங் கூர்மையும் வள்ளெனலாகும். (௧௦௧௨)

௪௦௪௪. வறிது—சிறுமை பயனில் சொலறியாமை வறிதே. (௧௦௧௩)

௪௦௪௫. மற்றும்வறிது—இனிமையிய லாமையும் வறிதெனலாகும். ()

௪௦௪௬. வன்னி—ஒருமரப் பெயருங் கிளியு நெருப்பும் - பிரம சாரிப் பெயரும்வன்னி. (௧௦௧௪)

௪௦௪௭. வாசம்—வாசமிருப்பிடமு மலரின் மணமும் - புள்ளி னிறகும் புடைவையும் புகலும். (௧௦௧௫)

௪௦௪௮. வாசி—வங்கியங் குதிரைவாசியென்ப. (௧௦௧௬)

௪௦௪௯. வாடை—வடகாற்றுஞ் சேரியுமோர் மருந்தும்வாடை. (௦௧௧௮)

௪௦௫௦ வாணி—பாரதிப் பெயரும் பகழிப் பெயரும் - வார்த்தையு மோர் கூத்தும் வாணியாகும். (௧௦௧௯)

௪௦௫௧. வாமனம்—குறளுந் திசை நிலைக்குஞ்சரத் தொன்றும் - வருமொரு நூலு மாலும் வாமனம். (௧௦௨௦)

௪0௨௭. வயம் எ-து—வலிமை, நீர், பறவைப்பொது. (௩)

௪0௨௮. வயல் எ-து—வெளி, கழனி. (௨)

௪0௨௯. வயவன் எ-து—வீரன், தலைவன், வலியன். (௩)

௪0௩0. வயா எ-து—வருத்தம், கருப்பம், ஆசை. (௩)

௪0௩௧. வயிரம் எ-து—சினம், கூர்மை, நவமணியிலொன்று, வச்சிராயுதம், மரவயிரம். (௫)

௪0௩௨. வரி எ-து—இசை, இசைப்பாட்டு, எழுத்து, குடியிறை, நெல், கடல், நிறம், தேமல், சந்தித்தெரு, கடன். (௧0)

௪0௩௩. வருடம் எ-து—மழை, வருடம். (௨)

௪0௩௪. வருணம் எ-து—குலம், நீர், அழகு. (௩)

௪0௩௫. வரை எ-து—அளவு, விரலிறை, மலை, மூங்கில், வரைவு, எழுத்து (௬)

௪0௩௬. வலம்புரி எ-து—நந்தியாவர்த்தம், வலம்புரிச்சங்கு. (௨)

௪0௩௭. வலவை எ-து—காளியேவற்பெண், வல்லவன். (௨)

௪0௩௮. வலி எ-து—ஒலி, வலியோன், கபடம். (௩)

௪0௩௯. வலித்தல் எ-து—கொழுத்தல், பேசல். (௨)

௪0௪0. வழங்கல் எ-து—ஈகை, உலாவல். (௨)

௪0௪௧. வழி எ-து—பழமை, ஒழுக்கம், திரட்சி, மக்கட்பன்மை, இடம், பின், முறைமை. (௭)

௪0௪௨. வளம் எ-து—மாட்சிமை, கொழுப்பு, தகுதி. (௩)

௪0௪௩. வள் எ-து—பற்றிரும்பு, வாள், காது, வலிமை, கூர்மை. (௫)

௪0௪௪. வறிது எ-து—சிறுமை, பயனில்சொல், அறியாமை. (௩)

௪0௪௫. மற்றும்வறிது எ-து—குறைவு, இயலாமை. ஆக (௫)

௪0௪௬. வன்னி எ-து—வன்னிமரம், கிளி, நெருப்பு, பிரமசாரி. (௪)

௪0௪௭. வாசம் எ-து—இருப்பிடம், பூமணம், பறவையினிறகு, சீலை. (௪)

௪0௪௮. வாசி எ-து—இசைக்குழல், குதிரை. (௨)

௪0௪௯. வாடை எ-து—வடகாற்று, இடைச்சேரி, ஓர்மருந்து. (௩)

௪0௫0. வாணி எ-து—சரச்சுவதி, அம்பு, சொல், ஓர்கூத்து. (௪)

௪0௫௧. வாமனம் எ-து—குள்ளம், தென்றிசையானை, ஓர்புராணம், திருமால். (௪)

௪0௫௨. வாயில்—வாய்புலந் திறங்கரணந் துவாரமும் வாயில். (௧0௨௧)

௪0௫௩. வாரணம்—யானையுங் கோழியுஞ் சங்கும் வாரணம். (௧0௨௨)

௪0௫௪. மற்றும்வாரணம்—தடைகடன் மெய்புகு கருவியுஞ் சாற்றுவர் (௧0௨௩)

௪0௫௫. வாரம்—ஆர்கலி கிழமைக் கூறுபா டன்பு - புனற்கரை மலையடி பகுதியும் வாரம். (௧0௨௪)

௪0௫௬. வாரி—கடலும் வெள்ளமும் பகுதியும் விளைவுஞ்-சுற்றுங் கதவும் வருவாயு நீரும்-வட்டையு மதிலும்வாரியாமே. (௧0௨௫)

௪0௫௭. வாருணம்—மறிகடற் பெயருமேற்கும் வாருணம். (௧0௨௬)

௪0௫௮. வால்—வெண்ணிறம் பெருமை தூய் தோகையும் வாலே. ()

௪0௫௯. வாள்—வசியு மொளியும் வாளென லாகும். (௧0௨௮)

௪0௬0. வானம்—வானமழையு மரத்தின் கனியு மாகமு-முலர்மரப்பெயரும் வரையார். (௧0௨௯)

௪0௬௧. வானி—வானியோர் நதியும் வளர் துகிற் கொடியுஞ்-சேனையுமேற்கட்டியுஞ் செப்பல்வேண்டும். (௧0௩0)

௪0௬௨. வான்—வானென் கிளவி வலியும் பெருமையு - மேகமு மாகாயமும் பெருமழையு மிடைச்சொல்லு - மோர்மர மென்று மோதுவர் புலவர் ()

௪0௬௩. விசும்பு—விண்ணுஞ் சுவர்க்கமு மேகமும் விசும்பே. (௧0௩௨)

௪0௬௪. மற்றும்விசும்பு—திசையின் பெயருஞ் செப்புவ ரதற்கே. ()

௪0௬௫. விசையம்—சருக்கரைப் பெயருந் தபனமண் டிலமும் - வெற்றிப் பெயரும் விசைய மாகும். (௧0௩௪)

௪0௬௬. விடங்கம்—வீதிக் கொடியும் வீட்டின் முகடு-மழகுங்கொடுங்கையு மாண்மையும் விடங்கம். (௧0௩௫)

௪0௬௭. விடம்—மரப்பொதுப் பெயரு நஞ்சுந்தே ளும்விடம். (௧0௩௬)

௪0௬௮. விடர்—கல்லவளைப் பெயருங் கமரும் விடரே. (௧0௩௭)

௪0௬௯. விடலை—திண்ணியோனுந் தலைவனும் பாலை - யிறைவனுங் காமத் துறைவனும் விடலை. (௧0௩௮)

௪0௭0. விடை—ஏறு மெருது மெதிர் மொழியும்விடை (௧0௩௯)

௪0௭௧. விண்டு—மாயவன் காற்று மலையே மூங்கில் - மேகமிவ்வைந்தும் விண்டுவெனலாகும். (௧0௪0)

௪0௭௨. விதப்பு—விபரமு நடுக்கமு மிகுதியும் விதப்பே. (௧0௪௧)

௪0௭௩. விதவை—சோறுங்கைம் பெண்ணும் விதவையாகும். (௧0௪௨)

௪0௭௪. விதிர்ப்பு—மிகுதியு நடுக்கமும் விதிர்ப்பென விளம்புவர். ()

௪0௭௫. விபுலம்—விரிவும் பெருமையும் விபுல மென்ப. (௧0௪௪)

சுடுஉ. வாயில் எ-து—ஐம்பொறி, திறம், காரணம், துவாரம். (சு)

சுடுங. வாரணம் எ-து—யானை, கோழி, சங்கு (ங)

சுடுச. மற்றும்வாரணம் எ-து—தடை, கடல், கவசம். ஆ (ங)

சுடுரு. வாரம் எ-து—கடல், எழுகிழமை, அன்பு, நீர்க்கரை, மலைச்சாரல், பங்கு. (ரு)

சுடுசா. வாரி எ-து—கடல், வெள்ளம், பகுதி, விளைவு, மதிற்சுற்று, கதவு, வருவாய், நீர், வழி, மதில். (கக)

சுடுஎ. வாருணம் எ-து—கடல், மேற்கு. (உ)

சுடுஅ. வால் எ-து—வெண்மை, பெருமை, சுத்தம், தோகை. (ச)

சுடுக. வாள் எ-து—வாளாயுதம், ஒளி. (உ)

சுசாய. வானம் எ-து—மழை, மரக்கனி, ஆகாயம், உலர்மரம். (சு)

சுசாக வானி எ-து—ஆன்பொருந்தநதி, துகிற்கொடி, படை, மேற்கட்டி. (ச)

சுசாஉ. வான் எ-து—வலி, பெருமை, மேகம், ஆகாயம், மழை, இடைச்சொல், ஓர்மரம். (எ)

சுசாங. விசும்பு எ-து—ஆகாயம், தேவலோகம், மேகம். (ங)

சுசாச. மற்றும்விசும்பு எ-து—திசை ஆ (ச)

சுசாரு. விசையம் எ-து—சருக்கரை, சூரியமண்டிலம், வெற்றி. (ங)

சுசாசா. விடங்கம் எ-து—வீதிக்கொடி, முகடு, அழகு, கொடுங்கை, ஆண்மை. (ரு)

சுசாஎ. விடம் எ-து—மரப்பொது, நஞ்சு, தேள். (ங)

சுசாஅ. விடர் எ-து—கற்புழை, நிலப்பிளப்பு. (உ)

சுசாக. விடலை எ-து—திண்ணியோன், பெருமையிற்சிறந்தோன், பாலைத்தலைவன், காமத்துறைவன். (ச)

சுஎய. விடை எ-து—இடபவிராசி, இடபம், உத்தரம். (ங)

சுஎக. விண்டு எ-து—திருமால், காற்று, மலை, மூங்கில், மேகம். (ரு)

சுஎஉ. விதப்பு எ-து—விபரம், நடுக்கம், மிகுதி. (ங)

சுஎங. விதவை எ-து—சோறு, கைம்பெண். (உ)

சுஎச. விதிர்ப்பு எ-து—மிகுதி, நடுக்கம். (உ)

சுஎரு. விபுலம் எ-து—விரிவு, பெருமை. (உ)

ச0எசு. விபூதி—நிரயத்தி லொன்று நீறுங்கொடுமையுந்-தசையுங் குற்ற முஞ் செல்வமும் விபூதி. (க0சரு)

சஎஎ. விம்மல்—பொருமலு மழுதலு மொலித்தலும் விம்மல். (கசசு)

ச0எஅ. வியப்பு—சினமுஞ் சினக்குறிப்பு மதிசயமும் வியப்பே. ()

ச0எகூ. வியல்—அகலமும் பெருமையுங் காடும் வியலே. (க0சஅ)

ச0அ0. விலோதம்—மங்கையர் மயிர்சுருள் பதாகையும் விலோதம். ()

ச0அக. வில்—மூல நாளொளி கோதண்டம் வில்லெனல். (க0ரு0)

ச0அஉ. விழவு—மிதுன விராசியு முற்சவமும் விழவே. (க0ருக)

ச0அரு. விழைச்சு—இளமையுங் கலவியும் விழைச்செனலாகும். ()

ச0அச. விழைந்தோர்—வேட்டோருங் காத லோரும் விழைந்தோர். ()

ச0அரு. விளர்—இளமையுங் கொழுப்பும் விளரொன்றிசைக்கும். (க0ருச)

ச0அசு. விள—விளாமர மிளமை கமரிவை விளவெனல். (க0ருரு)

ச0அஎ. விறப்பு—அச்சமும் பலமுஞ் செறிவும் விறப்பெனல். (க0ருசு)

ச0அஅ. விறல்—வென்றியும் வலிமையும் விற லாகும்மே. (க0ருஎ)

ச0அகூ. வீ...பூவு மொழிவு நீக்கமு மடிவும் - புள்ளின் பெயருஞ் சாவும் வீயே. (க0ருஅ)

ச0கூ0. வீசல்—கொடுத்தலு மெறிதலும் வீச லென்ப (க0ருகூ)

ச0கூக. வீதி—நேரோடுதலுந் தெருவும்வீதி. (கசு0)

ச0கூஉ. வீரை—ஒருமரப் பெயரு முறுதுயர்ப் பெயரும்-விரி கடற்பெயரும் வீரையாகும். (க0சுக)

ச0கூரு. வெடி—நறைபடு புகையு மச்சமு மன்றி-வெளியின்பெயரும்வெடியென்றாகும். (க0சுஉ)

ச0கூச. வெதிர்—செவிடு மூங்கிலும் வெதிரென மொழிப. (க0சுரு)

ச0கூரு. வெளில்—யானைத் தறியு மணிலும் பாடையுந்-தயிர்கடை தறியும் வெளிலெனச்சாற்றும். (க0சுச)

ச0கூசு. வெள்ளம்—ஈரமுங் கடலுங் கடலின்றிரையு- நீரின் பெருக்குமோ ரெண்ணும் வெள்ளம். (க0சுரு)

ச0கூஎ. வெள்ளி—புகரு மிரசதமும் புகலும் வெள்ளி. (க0சுசு)

ச0கூஅ- வெள்ளை—பலதேவனும் வெண்பாவும் வெளிறும்-வெள்ளை வெள்ளாட்டு மறியு மதுவுஞ்-சங்கும் வெள்ளை யென்றுஞ் சாற்றும். (க0சுஎ)

ச0கூகூ. வெறி—அணங்காட்டும் வட்டமு மச்சமும் பேயு - மணக்கு நாற்றமு மாற்றருங் கலக்கமும் - விளம்பிய நோயும் யாடும் வெறியெனல். (க0சுஅ)

௪0௭௬. விபூதி எ-து—ஓர்நரகம், திருநீறு, கொடுமை, தசை, முற்றும் செல்வம். (௬)

௪0௭௭. விம்மல் எ-து—இரங்கல், அழுதல், ஒலித்தல். (௩)

௪0௭௮. வியப்பு எ-து—சினம், சினக்குறிப்பு, அதிசயம். (௩)

௪0௭௯. வியல் எ-து—அகலம், பெருமை, காடு. (௩)

௪0௮0. விலோதம் எ-து—பெண்மயிர், மயிர்ச்சுருள், துகிற்கொடி. (௩)

௪0௮௧. வில் எ-து—மூலநட்சத்திரம், ஒளி, வில். (௩)

௪0௮௨. விழவு எ-து—மிதுனவிராசி, திருவிழா. (௨)

௪0௮௩. விழைச்சு எ-து—இளமை, புணர்ச்சி. (௨)

௪0௮௪. விழைந்தோர் எ-து—கணவர், விரும்பினோர் (௨)

௪0௮௫. விளர் எ-து—இளமை, நிணம். (௨)

௪0௮௬. விள எ-து—விளாமரம், இளமை, பமர். (௩)

௪0௮௭. விறப்பு எ-து—அச்சம், பலம், செறிவு. (௩)

௪0௮௮. விறல் எ-து—வென்றி, வலிமை. (௨)

௪0௮௯. வீ எ-து—மலர், ஒழிவு, நீக்கம், கேடு, பறவை. (௫)

௪0௯0. வீசல் எ-து—ஈதல், எறிதல். (௨)

௪0௯௧. வீதி எ-து—நேரோடல், தெரு. (௨)

௪0௯௨. வீணை எ-து—ஓர்மரம், துன்பம், கடல். (௩)

௪0௯௩. வெடி எ-து—நறும்புகை, அச்சம், வெளி. (௩)

௪0௯௪. வெதிர் எ-து—செவிடு, மூங்கில். (௨)

௪0௯௫. வெளில் எ-து—யானைத்தறி, அணில், பாடை, தயிர்கடை த்து. (௪)

௪0௯௬. வெள்ளம் எ-து—ஈரம், கடல், கடற்றிரை, நீர்ப்பெருக்கு, ஒரெண். (௫)

௪0௯௭. வெள்ளி எ-து—சுக்கிரன், வெண்பொன். (௨)

௪0௯௮. வெள்ளை எ-து—பலபத்திரன், வெண்பா, அறிவின்மை, வெண்மை, வெள்ளாட்டுமறி, கள், சங்கு. (௭)

௪0௯௯. வெறி எ-து—தேவர்க்காடுங்கூத்து, வட்டவடிவு, அச்சம், பிசாசம், வாசனை, கலக்கம், வியாதி, யாடு. (௮)

சக00. வெறுக்கை—செல்வமும் பொன்னும் வெறுக்கை யாகும். ()

சக0க. வேங்கை—புலியுமோர் மரமும் பொன்னும் வேங்கை. (க0எ0)

சக0உ. வேசரி—கழுதையுங் கோ வேறு கழுதையும் வேசரி. (க0எக)

சக0ங. வேட்டுவன்—மகமோர் குளவி மறவனும் வேட்டுவன் (க0எஉ)

சக0ச. வேணி—வேணி சடையு நதியும் விசும்புமாம். (க0எங)

சக0ரு. வேணு—உட்டொளைப் பொருளு மூங்கிலும் வேணு. (க0எச)

சக0சு. வேதிகை—பலகையுங் குறடுந் திண்ணையும் வேதிகை. (க0எரு)

சக0எ. வேய்—ஒற்று மூங்கிலு முட்டொளையும் வேயே. (க0எசு)

சக0அ. வேய்தல்—வேயுளுஞ் சூடுதலும் வேய்தலென்ப. (க0எஎ)

சக0கூ. வேலன்—வெறியாட்டாளனுங் குமரனும்வேலன். (க0எஅ)

சகக0. வேலி—ஊரு மரணுங் காவலு நிலமு-மேவிய வயலும் வேலி யாகும். (க0அகூ)

சககக. வேலை—கடலுங் கடலின் கரையும் பொழுதும்-வினையுங் காலையும் வேலையென்றாகும். (க0அ0)

சககஉ. வேல்—படைக்கலமு ஞாங்கரு மோர் மரமும் வேலே. (க0அக)

சககங. வேழம்—குஞ்சரமுங் கொறுக்கைச்சிப் பெயரு-மிசையுங் கரும்பு மூங்கிலும் வேழம். (க0அஉ)

சககச. வேளாண்மை—மெய்ம்மையுங் கொடையும் வேளாண்மை யாகும். (க0அங)

சககரு. வேளாளர்—சதுர்த்தருங்கொடை வள்ளலும் வேளாளர். (க0அச)

சககசு. வேள்—தார காரியுஞ் சளுக்கியர் வேந்தனும்-வேனி லாளனும் வேளெனலாகும். (க0அரு)

சககஎ- வேள்வி—அருச்சனை யளித்த லோதி யெழுஞ்சனி-வேள்விங் குண்டமும் வேள்வியும் வேள்வி. (க0அசு)

சககஅ-வேனில்—பொலிவுங் கொடையுமோ ரழகு மொப்பனையும் பேயின் றேரும் வேனிலாகும். (க0அஎ)

சககக. வை—வைக்கோலுங் கூர்மையும் பகுதியும் வையெனல். ()

சகஉ0. வைகல்—தினமுந் தங்கலுந் தெரியின் வைகல். (க0அகூ)

சகஉக. வையம்-உரோகிணி நாளும் பாருந்தேரு-மேறு மூர்தியும்வையமெனப்படும். (க0கூ0)

பத்தாவது

ஒருசொற்பல்பொருள்வகை

முற்றிற்று

ஆக்சூத்திரம் - சகஉக

பிங்கலந்தையென்னும் பிங்கலநிகண்டு

முற்றிற்று.

௪௧௦௦. வெறுக்கை எ-து—செல்வம், பொன். (௨)

௪௧௦௧. வேங்கை எ-து—புலி, ஓர்மரம், பொன். (௩)

௪௧௦௨. வேசரி எ-து—கழுதை, கோவேறு கழுதை. (௩)

௪௧௦௩. வேட்டுவன் எ-து—மகநட்சத்திரம், ஓர்குளவி, வேடன். (௩)

௪௧௦௪. வேணி எ-து—சடை, நதி, ஆகாயம். (௩)

௪௧௦௫. வேணு எ-து—உட்டொளை, மூங்கில். (௨)

௪௧௦௬. வேதிகை எ-து—கேடகம், குறடு, திண்ணை. (௩)

௪௧௦௭. வேய் எ-து—ஒற்று, மூங்கில், உட்டொளைப்பொருள். (௩)

௪௧௦௮. வேய்தல் எ-து—வீடு, சூடுதல். (௨)

௪௧௦௯. வேலன் எ-து—வெறியாட்டாளன், குமரன். (௨)

௪௧௧௦. வேலி எ-து—ஊர், மதில், காவல், நிலம், வயல். (௫)

௪௧௧௧. வேலை எ-து—கடல், கடற்கரை, பொழுது, தொழில், காலம். (௫)

௪௧௧௨. வேல் எ-து—ஆயுதப்பொது, வேலாயுதம், ஓர்மரம். (௩)

௪௧௧௩. வேழம் எ-து—யானை, கொறுக்கை, இசை, கரும்பு, மூங்கில். (௫)

௪௧௧௪. வேளாண்மை எ-து—உண்மை, கொடுத்தல். (௨)

௪௧௧௫. வேளாளர் எ-து—சூத்திரர், கொடையாளர். (௨)

௪௧௧௬. வேள் எ-து—குமரன், சளுவன், மன்மதன். (௩)

௪௧௧௭. வேள்வி எ-து—பூசனை, கொடுத்தல், மகநட்சத்திரம், ஓமகுண்டம், யாகம். (௫)

௪௧௧௮. வேனில் எ-து—பொலிவு, கோடை, அழகு, ஒப்பனை, பேய்த்தேர். (௫)

௪௧௧௯. வை எ-து—வைக்கோல், கூர்மை, பகுதி. (௩)

௪௧௨௦. வைகல் எ-து—நாள், தங்கல். (௨)

௪௧௨௧. வையம் எ-து—உரோகிணிநாள், பூமி, தேர், எருது, வாகனம். (௫)

பத்தாவது

ஒருசொற்பல்பொருள்வகை

முற்றிற்று

ஆகச்சூத்திரம் - ௪௧௨௧

பிங்கலந்தையென்னும் பிங்கலநிகண்டு

முற்றிற்று.

# பிங்கலநிகண்டு அகராதி.

பக்கம்

பிங்கலநிகண்டு அகராதி முற்றிற்று.

---

## வகையறிதல்.

# சோதனைப்பத்திரம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௭ | ௧௩ | கந்தவாகன் | கந்தவகன் |
| ௧௧ | ௧௪ | தடி | மிதடி |
| ௧௫ | ௧௪ | 0 | தமம் |
| ௧௭ | ௧௮ | மாளையன் | மாலையன் |
| ௨0 | ௪ | தாருகாரி | தாரகாரி |
| ௨௧ | ௩0 | 0 | பத்திரி, ஆரணி |
| ௨௩ | ௩ | இடாகினி (௪) | 0 (௩) |
| ௩௧ | ௨ | பண்டாரம் | இந்திரன்பண்டாரம் |
| ௸ | ௧௪ | கவர்க்கர் | சுவர்க்கர் |
| ௩௫ | ௯ | யமனூர்தி | இயமனூர்தி |
| ௪௩ | ௨௧ | முற்கொழுங் | முற்கொழுங்கோல் |
| ௫௫ | ௨ | ஒழுக்கம், வழுவுதல் | ஒழுக்கம்வழுவுதல் |
| ௫௬ | ௨௮ | விற்ப | விகற்ப |
| ௬௨ | ௨௨ | மாச்சரியம் | மாற்சரியம் |
| ௬௩ | ௨௫ | மாவிதம் | மாவிரதம் |
| ௬௭ | ௨௭ | தல் | குத்தல் |
| ௬௮ | ௨௮ | மானவம் | பிரமாண்டம் |
| ௭௫ | ௧௬ | புரம் | புரி |
| ௭௬ | ௩௨ | சாகடம் | சரிகடம் |
| ௭௯ | ௨௪ | உமையவட் | உமையாட் |
| ௮௧ | ௧௧ | பிளப்பின் | விடப்பிளப்பின் |
| ௸ | ௸ | 0 | விட்பு |
| ௸ | ௧௬ | 0 | வேடர் |
| ௮௩ | ௧௯ | துலியல் | ஓலியல் |
| ௮௬ | ௧ | சேதசம் | சேதகம் |
| ௯௧ | ௨௭ | 0 | சிராகம் |
| ௯௪ | ௩௩ | படுத் | படுத்த |
| ௧0௨ | ௨௭ | சோரம் | கோரம் |
| ௧௧0 | ௨௫ | வேயொற்றர் | வேயரொற்றர் |
| ௧௨௪ | ௪ | மன்னவர் | மண்ணவர் |
| ௸ | ௧௩ | அதற்கே | அவற்கே |
| ௧௩௧ | ௨௧ | அணு | அனு |
| ௧௩௩ | ௨௮ | சிமிலி | சிமிலம் |
| ௧௪௩ | ௧௫ | ஐயம், கவீனம் | ஐயங்கவீனம் |
| ௸ | ௨௩ | கட்டிகம் | கட்டி |
| ௧௪௪ | ௧ | பானளியேமேதை- | பானம்-அளியேமேதை |
| ௧௪௫ | ௨௮ | 0 | பூண் |
| ௧௪௯ | ௧ | இரதரம் | இரதநம் |
| ௧௫௩ | ௨௬ | கண்டை | கண்டைமணி |
| ௧௫௬ | ௧௨ | பாரம் | பாரகம் |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| கசுஅ | உஎ | தலைவன்றி | தலைவனன்றி |
| ககூஉ | உகூ | பலகைகயை | பலகை |
| ககூஅ | சு | வசி | விசி |
| உ0ரு | உசு | கடாரம் | கடாரம் |
| உஉக | ங0 | 0 (ரு) | கெடுதல் (சு) |
| உஙஎ | ஙரு | வரித்தல் | வாரித்தல் |
| உருரு | உஎ | நிபடம் | நிபிடம் |
| உஎரு | அ | கிரிசகம் | கிரிசரம் |
| உஎஎ | கஅ | மைம்மை | ம்மை |
| உஎகூ | சு | அயவாணம் | அயவணம் |
| உஅகூ | சு | குழவு | குழவி |
| ங0உ | உஅ | வானரப்பிரத்தி | வானப்பிரத்தி |
| [illegible] | உகூ | பத்திரும் | பத்தியம் |
| ங0ரு | கக | கொடி | (கொடி) |
| ஙஉ0 | உரு | குமுதம் | குசமும் |
| [illegible] | உஎ | நாகணற் | நாணற் |
| ஙஉஎ | உ | உள்வீடு | உள், வீடு |
| ஙஅஎ | கக | ஆரணம் | ஆபரணம் |
| ச0ரு | ககூ | பெய்யாதல் | பொய்யாதல் |

ஙசுசு-ம் பக்கத்திலிருக்கிற "சினமுஞ் சினக்குறிப்புஞ் செந்நிறமுஞ் செவப்பே" என்னும் சூத்திரத்தை ங எ0-ம் பக்கத்தில் "இடியும்" என்னும் சூத்திரத்திற்குப் பின்னே கொள்க.